உ

சிவ சிவ

# 'ஸ்ரீ குமரகுருபரர்'

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமார சுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

அருளாணையின் வண்ணம்

வெளிவரும் சமய - இலக்கியத் திங்கள் இதழ்.



அட்டையில்:

திருவண்ணாமலை

ஸ்ரீ அருணாசலேசுவரர் கோவில்

ACC. NO. 33833

# ஸ்ரீ குமரகுருபரர்

தொகுதி 3 கார்த்திகை பகுதி 2

## வழிபாட்டுக்காக

'சீர் அலைவாய்த் தெள்ளு திரை கொழிக்கும் செந்தூரில் போய்க் கருணை வெள்ளம் எனத் தவிசில் வீற்றிருக்கும் 'சைவக் கொழுந்து' ஸ்ரீசெந்திலாண்டவரின் வண்ணத் திருக்கோலம் இந்த இதழுடன் இணைக்கப்பெற்றுள்ளது. பின்னைக் கழற்றித் தனியாக எடுத்து-வழி பாட்டறையில் வைத்துக்கொள்ள வசதியாக இருக்கும்.

இந்த இதழிலிருந்து தொடர் எண்முறை பின்பற்றப்படுகிறது. ஐப்பசி இதழ் முதல் 12 இதழ்களின் பக்க எண்களும் தொடர்ச்சியாக வரும். 12 இதழ்கள் அடங்கிய தொகுதியை ஒன்றாக பைண்டு செய்து கொள்வதற்குத் துணையாகவே இந்தமுறை பின்பற்றத்தொடங்கி யிருக்கிறது.

பண்டார மும்மணிக்கோவை 11 ஆம் பாடலின் முதல் இரண்டடிகளுக்கு அதிபர் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி எஜமான் சுவாமிகள் அவர்கள் விளக்கம் அருளியுள்ளார்கள். சைவசித்தாந்த சாரமாகவே அவ்விளக்கம் அமைந்துள்ளது. மிக எளிமையாகவும், இனிமையாகவும் சாஸ்திரக் கருத்துக்களை நாம் அறிந்து நலம்பெற அருளியுள்ளார்கள்.

மகாவித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழில் சைவசித்தாந்தக் கருத்துக்கள் என்னும் வரிசையில் 'மோகினுக்கு மணாளன்' என்ற கட்டுரை வழங்கியுள்ளார்கள்.

'சித்தாந்த சங்கிரகம்' என்று ஒரு நூல். இது சாஸ்திர நூலன்று. நீதிமன்றத்தின் தீர்ப்புக்கள். இது ஒரு சுவையான அறிமுகம். மதுரை திரு. த. குருசாமி தேசிகர் அவர்கள் பழந்தமிழ்ப் பதிப்பு அறிமுகத்தில் பல வியப்பூட்டும் செய்திகளை அறிவிக்கிறார்.

சித்தாந்த சாஸ்திரங்கள் என்று அறிஞர் திரு. மு. அருணசலம் அவர்கள் ஒரு கட்டுரைத்தொடர் தொடங்கியுள்ளார்கள். இந்தத் தொடர் சித்தாந்தப் பயிற்சிக்குப் பாடங்களாக அமையும்.

வெளிவராத இலக்கியங்கள் வெளியிடும் பகுதியில் மலைவளர் காதலிஅம்மன் பேரில் சந்தவிருத்தம் வெளியிடப் பெற்றுள்ளது. இது சென்னை திருவான்மியூரில் உள்ள மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையத்தில் இருந்தது. ஷ நூல் நிலையத்தின் பதிப்புத்துறை இயக்குநர் அன்புகூர்ந்து அனுப்பி உதவினார்கள்.

திரு. கி. வா. ஜ. அவர்கள் திருவாரூர் நான்மணிமாலை 12 ஆம் பாடலுக்குச் சுவையான விளக்கம் தந்துள்ளார்கள். வலப்பாகத்தில் கங்கை என்னும் தலைப்பில் பிரசுரமாகியுள்ளது.

'வழக்கு வென்றது' என்ற தலைப்பில் ஒரு நாடகம் பிரசுரமாகியுள்ளது திரு. செந்திலாண்டவன் எழுதியுள்ளார். பள்ளி மாணவர்களை நடிக்கச் செய்து சிவசிந்தனையை வளர்க்க உதவும்.

தத்துவக் கட்டுரை இறக்குமதி, நால்நிறை முதலிய அம்சங்களும் இதழுக்கு அணி செய்கின்றன.

விடையரங்கத்தில் இருவர் விடைகள் இந்த இதழில் பிரசுரிக்கப் பெற்றுள்ளன. எஞ்சிய அடுத்த இதழில்.

— நி. ஆர்.

உ

சிவ சிவ

திருவண்ணுமலையில்

# திருக்கார்த்திகைப் பெருவிழா திருமுறை இன்னிசை விழா

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து 21 ஆவது அதிபர்

ஸ்ரீலஸ்ரீ காசிவாசி

**முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்** அவர்களின்

அருளாணையின் வண்ணம் நடத்தப்பெறுவது.

13. 11. 80உ முதல் 22. 11. 80உ முடிய

ரௌத்ரி ஆண்டு ஐப்பசித்திங்கள் 28ம் நாள் முதல் கார்த்திகைத் திங்கள் 7ம் நாள் முடிய திருவண்ணுமலையில் திருக்கார்த்திகைப் பெருவிழாவில் நாடோறும் திருமுறைப் பாராயணம் நடைபெறும்.

திருமுறைவாணர்கள்:-

1. தேவார இசைமணி,
   திரு. பி. இராமச்சந்திரன் —
   ஆசிரியர், தேவாரபாடசாலை, விருத்தாசலம்.
2. தேவார சங்கீத பூஷணம்,
   திரு. தி. சா. தண்டபாணி, ஸ்ரீகம்பகரேஸ்வர சுவாமி தேவஸ்தான ஓதுவார், திருபுவனம்.
3. தேவாரமணி
   திரு. S. திருநாவுக்கரசு தேசிகர் —
   ஸ்ரீ காசிமடம் கட்டளை ஓதுவார், திருவண்ணுமலை.
4. தேவாரமணி
   திரு. M. முத்தையன் தேசிகர் - திருவண்ணுமலை.
5. திரு. T. R. கிருஷ்ணன் — பிடில் - கும்பகோணம்.
6. திரு. கோ. வேங்கடராமன் — மிருதங்கம் திருப்பனந்தாள்.

திரு. ரெ. நா. இராதாகிருஷ்ணன். பி.காம்.,
நிர்வாக அதிகாரி,
ஸ்ரீ அருணசலேசுவரர் தேவஸ்தானம்,
திருவண்ணுமலை.

அருளாணையின் வண்ணம்
முத்து. மெய்கண்டதேவன்
மேலாளர்,
ஸ்ரீ காசிமடம்,
திருப்பனந்தாள்.

பூங்கொன்றைக் கண்ணியான் பொன்மன் றிறைஞ்சிடுக
ஆங்கொன்றைக் கண்ணி யவர்.



# அருள் பழுத்த கனிச்சுவை

நாம் காணும் உழவன் மண்ணுலகத்தில் உழவுத் தொழிலைச் செய்கிறான். ஞானாசிரியன் என்னும் உழவன்

'முற்படு மாயை முதற்கரை நாட்டில்
பற்பல புவனப் பகுதி பற்றி'

உழவைச் செய்கிறான்.

பதி, பசு, பாசம் என்பது சைவ சித்தாந்தம் உணர்த்தும் முப்பொருள் உண்மை. அதிலே பாசம் என்பது ஆணவம் கன்மம், மாயை என்ற மூன்று பிரிவுடையது.

ஆணவம் என்பது உயிரின் இயற்கைக் குற்றம். அறியாமையைச் செய்வதே அதன் உண்மை இயல்பு. நல்லதெல்லாவற்றையும் இது மறைக்கும். ஆணவத்தை அழிக்காத அஞ்ஞானி நண்பனைப் பகைவன் என்பான்; பகைவனை நண்பன் என்பான். இது மூலமலம். ஆணவம் என்ற சொல்லுக்குத் 'திமிர்' என்று ஒருவார்த்தையில் பொருள் சொல்லிவிட முடியாது.

'ஒருபொருளும் காட்டாது இருள்உருவம் காட்டும்
இருபொருளும் கட்டா திது'

என்று உமாபதி சிவாசாரியார் ஆணவத்தைப் பற்றி அறிவிக்கிறார்கள்.

கன்மம் என்பது ஆணவத்தால் வரும் விளைவுகளை உயிர்கள் அனுபவிக்குமாறு செய்வது. இது நல்லதை

அனுபவிக்க வைக்காது. மனத்தாலும், வாக்காலும், காயத் தாலும் இவ்வினை நிகழ்கிறது. இது இறைவனின் ஆணை வழியே உயிர்களை அடைகிறது.

மாயை என்பது மூலப் பொருள். எல்லாப் பொருளும் மாயை என்னும் காரணத்தின் காரியமே. வேட்கை, அல்லது 'விடுதல் அறியா விருப்பு' போன்ற மிக நுட்ப மான சொற்களால் மாயையின் தன்மையை விளங்கிக் கொள்ளலாம்.

சுத்த மாயை, அசுத்த மாயை, பிரகிருதி மாயை என மாயை மூன்று வகைப்படும்.

சுத்த மாயை என்னும் காரணத்தினுல் தோன்றும் உலகம் சுத்தப் பிரபஞ்சம் அல்லது தூய உலகம். ஒரு விதத்தில் இந்தச் சுத்த மாயையை மாயையே அல்ல என்று கூடச் சொல்லிவிடலாம். இதன் விளைவு நல்லதாக இருக்கிறதே!

அப்படியென்ருல் இந்தச் சுத்தமாயையை மாயை வரிசையிலே ஏன் சேர்த்தார்கள் என்று கேட்கலாம்! ஜீவனின் கடைத்தேற்றம் இருவினை ஒப்பால் தான் நிகழும். அந்தவிதத்தில் இந்தச் சுத்தமாயையும் தடைக் கல்லே! எனவேதான் இதுவும் மாயையுள் ஒன்ருக எண்ணப் பெறுகிறது.

மாயை என்பது பொதுவாக ஆணவம் கன்மம் என்னும் பாச மலங்களோடு கலப்புடையது. ஆனுல் இந்தச் சுத்த மாயை மட்டும் ஆணவ கன்மங்களோடு கலவாதது.

இந்தச் சுத்த மாயையை ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் 'முற்படு மாயை' என்கிருர்கள். பலவகையான பொருள் களின் பல்வேறு விதமான சக்திகளே மாயை ஆகலின் இந்த நற்சக்தியையே ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அறிவிக் கிருர்கள். இதன் பெயரை மட்டும் சொல்லுகிருர்கள்.

'இந்தியா உள்ளிட்ட பல நாடுகள் அடங்கிய உலகம்' என்று ஒருவர் சொன்னால் அதன் நயப் பொருள் என்ன என்பது அனைவருக்கும் தெரிந்ததே. உலகத்தில் இப்பாரத பூமியையே அவர் முக்கியமாக நினைக்கிறார் என்பது நயப் பொருள். அதேபோல 'மாயை என்ற உலகத்தில் சுத்த மாயை அசுத்த மாயை, பிரகிருதி மாயை என்ற நாடுகள் உள்ளன' என்று கூறாமல், 'சுத்தமாயை உள்ளிட்ட பல நாடுகள் உள்ள மாயை என்ற உலகம்' என்கிறார்கள்,

அந்த மாயைஉலகத்தில் மூன்று நாடுகளிலேயும் ஞானாசிரியன் விவசாயம் செய்கிறான். சுத்தமாயை என்னும் உலகத்தில் மட்டும் ஞானசிரியனின் விவசாயம் சற்றுக் சுலபமாக நடைபெறும் போலும். அதனால்தான் அந்த விவசாய நாட்டின் பெயரை மட்டும் குறிப்பிட்டு எஞ்சிய களர் நில நாடுகளின் பெயர் கூறாமல் விடுத் தருளினார்கள்.

ஜீவர்களிலே ஒருமலம் மட்டும் உடையவர்களை -- அதாவது ஆணவமலம் மட்டும் உடையவர்களை விஞ் ஞானகலர் என்பர். ஒரு அயோக்கியனைத் துணைவனாகக் கொண்டவன் ஒருவன்; அவனுடைய மற்ற நண்பர்களெல் லாம் நல்லவர்கள். அவனிடம் கெட்ட நண்பனின் துர்ப் போதனைகள் ஆசூழ் இருக்கும் வரை- நல்லகாலம் இருக்கும் வரை பலிக்காது. அதேபோலத்தான் ஆணவமலச் சார்பு மட்டும் உடைய ஜீவனை ஆணவமலம் அதிகமாகப் பிடிக்க வழியில்லை. இந்த விஞ்ஞானகலர் என்ற ஜீவர்களின் காரணமாகிய மயக்கமே சுத்தமாயை.

இங்கே ஒரு விஷயத்தை சற்று ஜாக்கிரதையாகச் சிந்திக்க வேண்டும். விஞ்ஞான கலருக்கு ஒரு மலம்தானே, சுத்த மாயையின் மயக்கம் சேர்ந்தால் இரண்டாகிறதே என்று குழம்பிக் கொள்ளக் கூடாது. மாயை என்பது காரணம் என்று முன்னரே குறிபிட்டோம். அதுவே காரிய மாகும்போது மாயாகார்யம் எனவேறாகச் சொல்ல

வேண்டும். விஞ்ஞான கலரைச் சார்ந்த சொற்பமான ஆணவத்திற்கும் ஒருகாரணம் என்ற அளவில் வருதலினல் இதனை வேருக எண்ணக் கூடாது.

இவ்வகையில் சுத்தமாயை என்ற நாடு நல்லநாடு: விஞ்ஞானகலர் ஞானசிரியனல் பக்குவப் படுத்துதற்குச் சுலபமானவர்கள்; விளைச்சலுக்கு ஏற்ற நிலம்.

இவற்றை உட்கோண்டே முற்படுமாயை என்று சுத்த மாயை மட்டும் குறிப்பிட்டு எஞ்சிய இரண்டையும் 'இவை முதலாகச் சொல்லப் பெறும் பல' என்பவற்றுள் அடக்கினர்கள்.

பிரளயாகலர் எனப்பெறும் ஜீவர்கள் ஆணவம் கன்மம் என்னும் இருமலங்களின் சார்பு உடையவர்கள். சகலர் எல்லாமலங்களின் சார்பும் உடையவர்கள். பிரளயாகலின் இருமலங்களுக்குக் காரணமாகிய மாயை அசுத்தமாயை. சகலருக்குக் காரணமாகிய மாயை பிரகிருதிமாயை (பிரகிருதி - இயல்பு).

இந்த இருவகை ஜீவர்களைப் பண்படுத்தி விவசாயம் செய்ய ஞானசிரியன் என்னும் உழவன் அதிகமாகப் பாடு படவேண்டும். இந்த நயத்தையும் இப்பகுதியில் ஸ்ரீ குமரகுருபரசுவாகள் அமைத்தருளியுள்ளார்கள்.

முற்படு மாயை முதற்கரை நாட்டில்
பற்பல புவனப் பகுதி பற்றி

[முற்படு மாயை - சுத்தமாயை, கரை - சொல்லப்படும்; புவனம் - உலகம்]

ஞானசிரியன் என்னும் உழவனின் உழவுத் தொழில் மாயா உலகில் சுத்த, அசுத்த, பிரகிருதி நாடுகளில் நடைபெறுகிறது என்று அறிந்தோம். இனி நிலங்கள் பற்றியும் உழவு முறைகள்பற்றியும் அடுத்த இதழில் காண்போம்.

— சிவ சிவ

# 26. கடினமும் பழுவின்மையும்

## 4ஆம் பாகம் - அதிகாரத்தின் தோற்றுவாய்

தமிழாக்கம்: கோ. வன்மீகநாதன்

திண்மையான[1] பொருள் ஒளியின் ஆணிவேர்;
அமைதி நிறைந்த பொருள் பரபரப்பின் எஜமான்.
ஆகையால் மெஞ்ஞானி நாள்முழுவதும் பிரயாணம் செய்கிறுன்
ஆயினும் தன் உணவுப் பொருள் கொண்ட வண்டியை விட்டுச் செல்வதில்லை[2]
கௌரதைகளுக்கும் புகழுக்கும் இடையில்
அவன் சாவகாசமாகவும் கலங்கப்படாமலும் வாழ்கிறுன்.
மாபெரும் நாட்டின் அரசன்
தன்சாம்ராஜ்யத்தில் தன் உடலை
எவ்வண்ணம் இலேசானதாகச் செய்யமுடியும்[3]?
கேலிக்கூத்தில் மையம் இழக்கப் படுகிறது;
பரபரப்பாகச் செய்யப்பட்ட காரியத்தில்
அடக்கமுடைமை அழிகிறது.

---

மேலே கொடுக்கப்பட்டுள்ள பாடலின் ஆசிரியர் காலத்திற்கு இரண்டு நூற்றுண்களுக்குப் பின் வந்த வியாக்கியான கர்த்தாவாகிய சுவங்சி என்பவர் இப்பாட்டிற்கு எழுதிய உரை. இப்பாட்டை விளக்குவதாக அமையவில்லை. இந்நூல் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த லின் யுடான் என்பவர் சிலஅடிக் குறிப்புகள் கொடுக்கிறுர். அவர் கூறுகிறுர்.

1. இதன் மூலப்பொருள் ''கனமானது'' என்பதாகும். இதற்கு நிலத்தை எடுததுக்காட்டாகச் சொல்வார்கள். சீன மொழியில் 'கன மான தன்மை,' 'மொத்தமான தன்மை' என்று ஒரு மனிதனின் பண்புகளைப் பற்றிக் கூறினுல், ''நாணயமான தன்மை'', ''கொடை வள்ளண்மை" என்று பொருள் பெற்று மாறுபடாத, நிலைபெற்ற அதிர்ஷ்டத்தையும், சகிப்புத்தன்மையையும் குறிக்கும். அதற்குமாறுக ''மெல்லியது'' "எடைகுறைவானது'' என்று ஒரு மனிதனின் குணத்தைக் கூறினுல் அவன் கேலிக்கூத்துப் பிரியன், ஏமாற்றுபவன் என்று பொருள்படும்.

2. உணவுப்பொருள் கொண்ட வண்டி, அதாவது உக்கிராண வண்டி. இது திண்மை, பழுவுடைமை என்ற சொல்லின் சிலேடை. அதாவது பிரவி ராஜிகர் என்று சொல்லப்படும் துறவிகள் ஓரிடத்தில் தங்குவதில்லை. கால்நடையாய் ஊரூராய்ச் சென்றபடியே இருப்பர். ஆனுல் அதற்காகத் தன் நேம நிஷ்டைகளை, தன விரதங்களை, தன் ஆசாரத்தை, ஒழுக்கத்தைக் கைவிடுவதில்லை என்பது பொருள்.

3. ஊடுக்கு ஊர் ஓடித்திரிவரால். அதாவது நம்நாட்டு மந்திரிகள் இன்று இராமேசுரம், அதே இரவு திருநெல்வேலி, அடுத்த நாள் ஊட்டி, அடுத்த நாள் கன்யாகுமரி என்று ஓடித் திரிவதால் அவர்கள் ஒன்றும் சாதிப்பதில்லை; இது கேலிக்கூத்தே என்கிறுர் லொட்ஸி.

# சித்தாந்த சாஸ்திரங்கள்

## மு. அருணாசலம்

சைவ சமயம்: சைவ சமயம் அனாதியானது. இதைத்தோற்றுவித்தவர் என்று ஒருவரும் இல்லை. உலகத்தில் உள்ள பெருமதங்கள், புத்தர், ஜின தேவர், கிறிஸ்து, முகமது ஆகிய மனித வர்க்கத்தினரால் வெவ்வேறு காலங்களில் தோற்றுவிக்கப் பெற்று முறையே பௌத்தம், சைனம், கிறிஸ்தவம், முகமதியம் என்று அவரிவர் பெயராலேயே பெயர் பெறுகின்றன. இவற்றுக்குத் தோற்றுவிக்கப்பட்ட காலமும் உண்டு; தோற்றுவித்தாரும் உண்டு. சைவத்துக்கு இந்த இரண்டும் இல்லை. இதைத் தோற்று வித்தவர் என்று எவரும் இலர்; தோற்றுவித்த காலம் என ஒன்று இல்லாமல், இச்சமயத்துக்குரிய பரம் பொருளாகிய சிவபெருமானைப் போல இதுவும் அனாதியானது.

இச்சமயத்துக்குப் பொருள் மூன்று. உலக ஆகிய தளைகள், இவற்றால் கட்டுண்டு அல்லற்படுகின்ற உயிர்கள், இவை இறுதியில் அடைய வேண்டிய பேறுஆகிய சிவம் என்பன இந்தமுப்பொருளையும் கூறுபவை. இச்சமயத்துக்குரிய சாத்திரங்கள் எனப்படும். இச்சாத்திரங்கள் வடமொழி தென்மொழி இரண்டிலும் உள்ளன. வடமொழிச்சாத்திரங்கள் சைவாகமம் எனப்படும். தென்மொழிச்சாத்திரங்கள் சித்தாந்த சாத்திரம் அல்லது மெய்கண்ட சாத்திரம் எனப்படும். பிந்தியவற்றை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம் எனினும் இங்கு முந்தியவற்றைப்பற்றிச் சில சொற்கள் சொல்லலாம்.

சைவாகமங்கள்: சைவாகமங்களைச் சிவபெருமான் தமது ஐந்து முகங்களிலிருந்தும் தோற்றுவித்தார் என்று ஆகமங்கள் கூறும். இவை மொத்தம் 28. ஒவ்வோர் ஆகமத்துக்கும் கிளையாகப் பலவழிநூல்கள் உள்ளன. இவை உபாகமங்கள் எனப்படும். 28 மூலாகமங்களுக்கு உரிய மொத்த எண்ணிக்கை 207.

ஆகமங்கள் நான்கு பாதங்களையும் கூறும். இவற்றைப்பொதுவாக ஞானம், கிரியை, யோகம், சரியை என்று வரிசை முறையில் அமைத்துக் கூறும். ஞான பாதத்தை அவை வித்தியாபாதம் என்றே பெயர் சொல்லும். பொதுவாகக் கிரியா பாதத்தை ஆகமங்கள் விரித்துச் சொல்வதால் ஆகமங்கள் கிரியையே செல்லுகின்றன என நினைக்கிறார்கள். இது தவறான கருத்து. வித்தியாபாதத்தில்சமயதத்துவப்பொருளை

இவை விரித்துக் கூறும். இதுவே மெய்ப்பொருள் பகுதி. மற்ற இரண்டில் யோகப்பகுதி. ஆகமங்களில் மிகக்குறுகிய அளவினதாகஇருக்கும். ஆகமங்களை யார் யாருக்குச் சொன்னர், அவை யார் மூலம் பரவின என்றெல்லாம் விரிவான வரலாறுகள் உள்ளன.

கோயில் பற்றிய சகல காரியங்களும் ஆகம வழியில் தான் நடைபெறுகின்றன. கோயில் கட்டுவதற்கு நிலத்தைத் தேர்ந்தெடுப்பது முதல், கோயில் கட்டடம், சிற்பம், கும்பாபிஷேகம், வழிபாடு, உற்சவங்கள் வரையில் ஆகமங்களில் சொல்லாத பொருள் எதுவும் இல்லை.

சைவ சமயத்தில் கோயில் வழிபாடு முக்கியமான அங்கம் வகிக்கிறது. அது பற்றியே இவ் வழிபாட்டு முறைகளையும்,தத்துவங்களையும் விதந்து சொல்லுகின்றன. சிவாகமங்களையும், சைவர் தங்கள் மூல சாத்திரமாகப் பண்டைக் காலத்திலேயே கொண்டிருக்கிருர்கள்.

சைவாகமங்களைச் செய்தவர்கள் தமிழ் நாட்டார். வட நாட்டார் அல்ல. வடமொழிவாணர் அல்ல. இவற்றைச் செய்தோர் சிவாசாரியரும் சிவஞானியரும் ஆவர். இப் பொருள்களை விரித்தால் பல புத்தகங்கள் எழுத வேண்டியிருக்கும். இவற்றைச் சுருக்கிச் சொல்லக்'கூட இடமில்லை.

உபநிடதங்கள்:

இனி வேதத்தின் நான்காவது பாகம் உபநிடதம் என்பதாகும். இதுவே மெய்ப் பொருளைக் கூறுவது. சாதாரணமாக ஞான மார்க்கத்தில் வேதம் என்று சொல்லும் போது அதன் பொருள் உபநிடதம் என்பதே. இது வேதத்தின் பிற பாகங்களைக் குறிக்காது. உபநிடதம் வேதத்தின் அந்தம் ஆனமையால் இது வேதாந்தம் எனச் சொல்லப் பெறும். உபநிடதம் இந்து மதத்தின் எல்லாப் பிரிவுகளுக்கும் பொது. அவை சைவத்துக்கும் உரியன. சைவ சித்தாந்த சாத்திரங்கள் வேதத் தலை தரு பொருள் என்றும், 'வேத சிரப்பொருள்' என்றும் இதைக் கூறும். உபநிடதங்கள் பல. அவற்றுள் சுவேதாசுவதர உபநிடதம் என்று ஒன்று. அது சைவப் பொருளைத் தழுவிச் சொல்லப் பட்டிருக்கும். ஆகவே அதை ''ஆகமஉபநிடதம்" என்றும் சொல்வார்கள்.

இந்துமதத்தின் பல பிரிவுகளிலும் வந்து ஆசாரியர் தங்கள் கொள்கைக்கு ஏற்ப அவற்றைப் பொருள் பண்ணிக் கொண்டார்கள். சைவ சித்தாந்த பரமாகப் பொருள் பண்ணிக் கொள்ளவும் அவை இடம் கொடுக்கும்.

இந்து மதத்தில் பொதுவாக மூன்று சாத்திரங்கள் என்று எல்லோரும் ஒப்புக் கொள்வார்கள். அவையாவை? உபநிடதங்கள் பிரம்ம சூத்திரம், பகவத் கீதை என்பன. சைவர்களுக்கு உபநிடதம் பிரம்ம சூத்திரம் உடன்பாடு. பகவத் கீதையைக் கொலை நூல் என்று சொல்லி அவர்கள் விலக்கி விடுவார்கள். சங்கரர், இராமானுஜர், நீலகண்டர், மாத்துவர் முதலியோர் இவற்றுக்குத் தனித்தனி பாஷ்யம் எழுதியுள்ளார்கள். ஸ்ரீகண்டசிவாசாரியர் பிரும்மசூத்திரத்துக்குப் பாஷ்யம் எழுதியுள்ளார். சிலவிலக்குகளுக்கு உட்பட்டு, இந்தபாஷ்யம் சைவபாஷ்யம் என்று சொல்லப்பெறும். இதனுள்இவர் "வேதங்களுக்கும் சிவாகமங்களுக்கும் இடையில் எந்த வேறு பாட்டையும் யாம் காணவில்லை" என்று எழுதுகிறார்.

இங்கு நாம் கூறியது சிறப்பாக, "சைவாகமங்கள் சைவருக்குரிய மூல சாத்திரங்கள்; அவற்றை இயற்றினோர் சிவாசாரியரும், சிவஞானிகளும்; பிராமணர் அல்லர்" என்பதாகும். ஞானிகள் உள்ளத்தில் சிவபெருமான் ஆகம ஞான ஒளியை ஏற்ற அவர்கள் அந்த ஒளியை ஓலை ஏட்டில் பிரதிபலிக்கச் செய்தார்கள்.

ஆகமங்களையன்றி, மேலே கூறிய ஸ்ரீகண்ட பாஷ்யம் போல, சைவருக்குரிய வடமொழிச் சாத்திரங்கள் பல உள்ளன. அவற்றை இங்கு விவரிக்க இடமில்லை.

---

# வலப்பாகத்தில் கங்கை

கி. வா. ஜகந்நாதன்

சிவபெருமானுடைய வாம பாகத்தில் உமாதேவி எழுந்தருளியிருக்கிறாள். அவனுடைய திருமுடியில் கங்கை இருக்கிறாள். அவளும் இறைவனுடைய மனைவியென்று சொல்வதுண்டு.

கங்கை ஒரு நாள் ஒன்றை நினைத்தாள். "உமாதேவி இடப் பாகத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறாளே; நாம் மட்டும் சும்மா தலையில் இருக்கலாமா? நாம் வலப்பாகத்தை ஆக்கிரமித்துக் கொள்ளலாமா" என்று தீர்மானித்து அப்படியே அந்தப் பாகத்தை வௌவிக்கொண்டாள்

இது உண்மையில் நிகழ்ந்த நிகழ்ச்சியன்று. இறைவனுடைய திருமேனியைப் பார்க்கும்போது, 'ஒருகால் கங்காதேவி எம்பெருமானுடைய வலப்பாகத்தை எடுத்துக் கொண்டு விட்டாளோ?' என்று தோன்றுகிறதாம். இப்படி ஒரு கற்பனையைச் செய்கிறார் குமரகுருபர முனிவர்.

கங்கை வெண்ணிறமுடையது. இறைவன் வெண்மையான திருநீற்றைப் பூசிக்கொண்டிருக்கிறான். கங்கை வலப்பாகம் முழுவதையும் உடையதாக்கிக் கொண்டது போல அந்தத் தோற்றம் இருக்கிறது.

தாம நீற்றொளி தன் நிறம் காட்ட

(தாமம்-விளக்கம். தன்நிறம் - கங்கையின் வெள்ளை நிறத்தை)

''தம்மேனி வெண்பொடியால்
தண்ணளியால் ஆரூரர்
செம்மேனி கங்கைத்
திருநதியே''

என்று இவ்வாசிரியரே பின்னே (38) பாடுகிறார்.

கங்கையில் நுரை இருக்கும். இறைவன் மேனியில் கங்கை படர்ந்தால் அங்கே நுரை இருக்க வேண்டுமே. இறைவன் திருமார்பில் அணிந்துள்ள கபாலமாலை நுரையைப் போலக் காட்சியளிக்கிறது.

வெண்தலைநிரை நுரைகாட்ட.

(வெண் தலை-தசையில்லாத தலை; நிரை-வரிசை.)

சிவபெருமானுடைய திருமேனியழகில் ஈடுபட்ட மாளிர் அதையே கூர்ந்து பார்த்துக் கொண்டிருக்

கிறார்கள். மேனி முழுவதும் அவர்களுடைய கண்கள் உலவுகின்றன. அது கங்கையில் கயல் மீன்கள் உலவுதலைப் போலத் தோற்றுகிறது.

காமர் பூங்கொடி மடந்தையர்
மதர்விழிக் கயல்உலா வரலாலே

[காமர் - அழகுமடுவிய. கொடி போன்ற மடந்தையர். மதர்விழி-பூரிப்புள்ள கண்கள். விழிகளாகிய கயல்கள்.]

இறைவனைக் காணும் மகளிரின் கண்கள் கயல்களைப் போல அவன் மேனியில் உலவுதலை,

"காமிக்கும் மடந்தையர்கட்
கயலெல்லாம்
உமையடைதல் கணக்கே
அன்றோ?"
(மதுரைக் கலம் பகம்; 91)

என்று இம்முனிவரே பிறிதோரிடத்தில் சொல்கிறார்.

கங்கா நதியின் வெண்ணிறம்; அதில் உள்ள நுரை, கயல் மீன்கள் ஆகிய மூன்றையும் போலத் திருநீறும், வெண்டலையும், மகளிர் கண்களும் இருக்கின்றன. அவற்றைப் பார்த்தால், "ஓ? காங்கா தேவி இவருடைய வலப்பாகத்தைப் பற்றிக்கொண்டு விட்டாள் போலிருக்கிறது" என்று நினைக்கத் தோன்றுகிறது.

வலப்பாகம் நீர்மங்கை
கொண்டனள் போலாம்!

உமாதேவி வாமபாகத்தைக் கொண்டதை முதலில் சொல்லி விட்டுப் பிறகு இந்தத் தோற்றத்தைச் சொல்கிறார்.

பகைவர்களுக்கு அச்சத்தைத் தரும் வேலாயுதத்தைக் கையில் ஏந்தியவன் முருகன். அவனைப் பெற்றருளியவள் உமாதேவி. அந்தப் பெருமாட்டி தியாகப் பெருமானுடைய இடப்பாகத்தை உரிமையாக்கிக் கொண்டிருக்கிறாள்.

நாம வேற்படைக் கடவுளைப்
பயந்தருள்
நங்கைதென் கமலேசர்
வாம பாகத்தைக் கொள.

அவள் ஒருபாகத்தைப் பற்றிக் கொண்டாளே; நமக்கு மட்டும் அந்த உரிமை இல்லையா? என்ற போட்டி மானப்பான்மையில் கங்காதேவி தியாகேசருடைய வலப்பாகத்தைப் பிடித்துக் கொண்டாளாம்.

நாம வேற்படைக் கடவுளைப்
பயந்தருள்
நங்கைதென் கமலேசர்
வாமபாகத்தைக் கொள, வலப்
பாகம், நீர்
மங்கைகொண் டனள்போலாம்
தாம நீற்றெளி தன்நிறம்
காட்ட, வெண்
டலைநிரை நுரைகாட்டக்
காமர் பூங்கொடி மடந்தையர்
மதர்விழிக்
கயல் உலா வரலாலே.

கமலேசர் பூசிய விளக்கத்தையுடைய திருநீற்றின் ஒளி கங்கையின் வெண்ணிறத்தைக் காட்டவும், திருமார்பில் அணிந்துள்ள தசையற்ற தலைவரிசை நுரையின் தோற்றத்தைக் காட்டவும், அழகுடைய பூங்கொடியைப் போன்ற பெண்களின் மதர்த்த கண்களாகிய கயல்கள் உலாவுதலால், பகைவர்கள் அச்சத்தைத் தரும் வேலாயுதத்தையுடையை முருகனை ஈன்றருளிய உமாதேவி தென்னாட்டிலுள்ள திருவாரூர்ப் பெருமானுடைய இடப்பாகத்தைத் தான்இருக்கும் இடமாகக் கொள்ள, அதுகண்டு அவருடைய வலப்பாகத்தை நீர் மகளாகிய கங்கை உரிமையாகப் பற்றிக் கொண்டனள் போல இருக்கிறது.

''காட்ட, காட்ட, உலா வரலாலே, நங்கை கொள, நீர்மங்கை கொண்டனள் போலாம்?'' என்று கூட்டுக.





# விடையரங்கம்



வினு:-

திருஞானசம்பந்த சுவாமிகள் நின்றசீர் நெடுமாறனின் உத்தரவைத் தடுக்காதது ஏன்? சேக்கிழாரின் காரணத்தோடு சிந்தனையை நிறுத்தினுல் போதுமா? தீவைப்புக்கு இவ்வளவு பெரிய தண்டனையா?

விடை:-

... ந. ரா. முருகவேள், M.A., M.O.L.

சேக்கிழார் பெருமான் கூறியருளிய காரணத்தோடு, நம் சிந்தனையை நிறுத்துதலே அமையும். தண்டனை பெரிதா சிறிதா என்பது, அவரவர் கருத்தைப் பொறுத்தது. தண்டனை முறைகள், அந்தந்தக் காலத்திற்கும் நாட்டிற்கும் ஏற்ப, வெவ்வேருக அமைவதுண்டு. தீவைப்புக்கு மட்டுமே தண்டனை அளிக்கப்படவில்லை; சமணர்கள் வாதில் ஒட்டித் தோற்றனர்; ''முன்னமே பிள்ளையார்பால் அனுசிதம் முற்றச் செய்தனர்''! கொல்லாமையைக் கொள்கையாகக் கொண்டிருந்த அவர்கள், பதினுறுயிரம் அடியார்கள் தங்கியிருந்த திருமடத்தில், நள்ளிருளில் தீ வைத்தார்கள். கொல்லாமைக் கொள்கையுடையவர்கள், தீ வைத்த குற்றம் மிகப் பெரியதாதலின், தண்டனையும் பெரியதாதல் பொருத்தமேயாகும். குற்றத்தைத் தினைத் துணையாகக் கொள்வதும், பனைத் துணையாகக் கொள்வதும், சூழ்நிலைகள், மனப்போக்குகள், செய்தார்-செய்யப்பட்டார்சால்புகள், நோக்கங்கள் ஆகிய பலவற்றைப் பொறுத்தது. ஆதலின் தண்டனை பெரிதென்று துணிவாகக் கூறுதல் இயலாது.

என்ருலும் இக்காலத்தில், சமணர்களின் தோல்வியையும், கழுவேற்றத்தையும் குறித்து, அதனுல் திருஞானசம்பந்தப் பெருமானுக்கோ, நம் சைவ சமயத்துக்கோ, நாம் பெருமை தேடக் கருதுவது முறையாகத் தோன்றவில்லை. சேக்கிழார் பெருமான் ''கவிதைநீதி'' (Poetic Justice) யாகச் சமணர்களின் தோல்வியைக் குறித்துப் பாடியிருக்கலாம். அவர் பாடியது ஒன்றேகொண்டு ''எண்பெரும் குன்றத்து எண்ணாயிரவரும் கழுவேறினுர்கள்'' என்பதனை, முழுக்க முழுக்க ஒரு வரலாற்று நிகழ்ச்சியாகத் துணிந்து நம்புதலும், நம்பியேயாக வேண்டும் என்று வற்புறுத்துதலும் பொருத்தமன்று. புகழ்பெற்ற வரலாற்று ஆசிரியர்கள் பலர், இத்தகைய சமயக் கொடுமை நிகழ்ச்சிகள், உண்மையில் நடைபெறவில்லை என்றே ஆராய்ந்து கூறுகின்றனர்.

''Hinduism overcame Buddhism and Jainism by assinilating their finer features. This was effected not by its persecuting or peralising them, but by producing greater scholars, better authors, nobler saints, and finer artists, and above all by praitising greater active piety and philanthropy''

– Sir Jadunath Sarkar.

ஆதலின் சமணர் கழுவேறியதையோ, கழுவேற்றப்பட்டதையோ பற்றி, நாம் பெருமிதம் கொள்ளவேண்டுவதில்லை. "அற்றம் மறைக்கும் பெருமை, சிறுமைதான் குற்றமே கூறிவிடும்'' என்று திருவள்ளுவர் அறிவுறுத்தியருளிய கருத்தை நம் உள்ளத்தில் இருத்தி, பெரியபுராணத்தில் வரும் சிறப்பான பகுதிகளை மட்டும் மக்களிடையில் பரப்பி, இன்னோரன்ன சிலவற்றை வலியுறுத்தாமல் பெரிதும் புறக்கணித்துவிடுதலே நலம் பயக்கும்.

அ. ச. ஞானசம்பந்தன், M.A.

வினாத் தெளிவாக இல்லை. நெடுமாறனின் உத்திரவைத் தடுக்காதது ஏன்? எந்த உத்திரவை இவர் குறிப்பிடுகிறார்? அவன் இட்டது இரண்டு உத்திரவுகள்.

ஒன்று:- சமணத் துறவிகள் தம் மந்திர சக்தியால் (திருஞா. 688 - 49) தீவைப்போர் எனக் கூறிய பொழுது 'அதனையே விரைந்து செய்யப்போவது' என்று ஆணையிட்டதாகும். இதனைப் பிள்ளையார் தம் ஞானக் கண்ணால் அறிந்தாலும் தடை செய்யவில்லை. காரணம், மங்கையர்க்கரசியாரையும், பாண்டியனையும் தமிழ்நாட்டையும் தமிழையும் மீட்கவேண்டும் என்பதேயாகும். இவ்வகைச் செயல் இன்றேல் பிள்ளையார் பாண்டி அரசியலில் தலையிடுவது தவறாக முடியும்.

இரண்டு:- சமணரைக் கழுவேற்று என்ற ஆணை பிறப்பித்தது. இவ்விடத்தை ஆழ்ந்து சிந்திக்க வேண்டும், ஏன், அரசன் இக்கொடிய தண்டனையை வழங்கினான்? 'கொலையில் கொடியாரை வேந்து ஒறுத்தல் பைங்கூழ்களை கட்டதனொடு நேர்' என்பது சட்டம். 'தாங்கள் முன்னமே பிள்ளையார்பால் அநுசிதம் முற்றச் செய்தார்' என்பது சான்று (853) இச்சான்றின் விரி அடுத்த 855ம் பாடலில் பேசப்பெறுகிறது. பிள்ளையார் காழ்ப்புணர்ச்சியோ, பகை உணர்ச்சியோ கொள்ளவில்லை. இரண்டு காரணங்கட்காக வாளா இருந்துவிட்டார்.

(1) சைவர் இருந்து வாழ்மடத்தில் தீங்கு
தகவிலாச் சமணர் செய்த
செய்கையால் சாலும் என்றே
மிகையிலாவேந்தன் செய்கை
விலக்கிடாது இருந்தவேலை.

(2) அரசன் தக்ககாரணம் என்று முடிவு செய்து நீதி வழங்குகையில் தனியொரு குடிமகன் எத்துணைப் பெரியவனுயினும் தலையிட்டுத் தான்செல்வாக்கைப்பயன்படுத்து வது மாபெருந்தவறு. அவ்வாறு செய்திருப்பின் பிள்ளையார் தற் கால அரசியல்வாதிகள் போல் ஆகிவிடுவார். அரசியல் பதவி வகிப்போர் கையில் சிக்கி இற்றை நாள் சட்டம் படும்பாட்டை நாம் நன்கு அறிவோம். இத்தகைய செய்கையைப் பிள்ளையார் செய்ய வேண்டும் என்று நினைப்பது விந்தையேயாகும்.

இன்றுகூட ARSON என்று கூறப்படும் தீ வைத்த குற்றத்திற் குத் தண்டனையாக மரண தண் டனை வழங்கப்படலாம். இதனு லேயே குற்றத்தையும், அதற் குரிய தண்டனையையும் சீர்தூக் கிப் பார்த்த பிள்ளையார், மன் னன் செய்கை மிகையிலாச் செய்கை என்ற முடிவுக்கு வந்து வாளா இருந்துவிட்டார்.

இதனைப் பாடிய சேக்கிழார் சோழப் பேரரசின் முதல் அமைச் சர். எனவே குற்றம் தண்டனை என்ற முறைபாட்டை நன்கு அறிந்துபேசுகிருர்.'புகலியில்வந்த இகல் இலர் எனினும்' என்ற சொற்களை நின்று ஆராயவேண் டும். நீதி மன்றத்தில் ஒருவனுக் குத் தூக்குத் தண்டனை விதிக்கும் நீதிபதியை நாம் ஏன் கொடிய வர் என்று கூறுவதில்லை? அத னைச் சொல்பவர் குற்றவாளியை முன்பின் அறியாதவராகலின் விருப்பு, வெறுப்பு, காழ்ப்பு முதலிய எதவும் இன்றி நடுநிலை யில் நின்று அந்த நீதியை வழங்கு வதால்தான் நாம் நீதிபதியைக் குறைகூறுவதில்லை. இந்தக் கருத் தைப் பிள்ளையார்பால் ஏற்றிக் காணவேண்டும் என்று கருதிய அமைச்சர் பெருமான் 'இகல் இலர்' என்று கூறுகிருர். யாதும் தவறிழைக்காத அடியார்கள் ( innclent ) வாழ்மடத்தில் தீ வைப்பது என்பதும் அதுவும் அரச னிடம் பொய் சொல்லி அவன் உத்திரவைப் பெற்றுக்கொண்டு தீ வைப்பது ஆழ்ந்து சிந்தித்துத் திட்டமிட்டுச் (Preplannar moti-vatted) செய்த செயலாகும்.

இரண்டாவது குற்றம் மந்திரத் தால் செய்யப் போகிருேம் என்று பொய்கூறி மன்னனிடம் உத்திரவு வாங்கியது. மந்திரம் என்றதால் மன்னன் சரி என்று ஆணைப்பிறப் பித்தான். கொள்ளிவைப்பார் கள் என்று தெரிந்திருந்தால் மன் னன் உத்திரவு தந்தே இருக்க மாட்டான் என்பது தெளிவு.

சேக்கிழார் சாதரான மனிதர் அல்லர்; தேர்தல் மூலம் அல்லா மல் மன்னனுல் தேர்ந்தெடுக்கப் பெற்ற அமைச்சர். சட்ட ஞானம் மனதத்துவம், நீதி, அறம் என்ப வற்றில் தெளிவான அறிவுடைய வர். எனவேதான் ஒவ்வொரு சொல்லிலும் பொருட்செறிவை வைத்துப் பாடுகிருர் 'அவர் கூறுய காரணத்தோடு சிந்த னையை நிறுத்திஞல் போதுமா' என்ற வினைவைக் கண்டு வியப் படைகிறேன். அவர் கூறும் கார ணங்களை முழுதுமாகப் புரிந்து கொள்ள வேண்டுமாயின் நாமும் ஒரு சேக்கிழாராகத்தான் மாற வேண்டும்.



# குரு லிங்க சங்கம வழிபாடு

வித்துவான் நா. ம. வெள்ளைவாரணம்

முன்னுரை: பசுவின் உடம்பு முழுவதும்பால் பரவி இருக்கிறது. இருப்பினும் அப்பாலானது பசுவின் மடி வழியாகவே வெளிப்படுகிறது. அதுபோலவே பரம் பொருளாகிய இறைவன் எவ்விடத்தும் நீக்கமறநிறைந்திருக்கிறன். இருப்பினும் அவ்விறைவன் குரு, லிங்கம், சங்கமம் என்ற மூன்றிடத்தும் விளக்கமாக வெளிப்படுகிறன். எனவே, அம்மூவரையும் வழிபட்டு உயிர்கள் பிறவியை நீக்க முயல வேண்டும். இந்த மூவகை வழிபாட்டையும் விரிவாகக் காண்போம்.

குருவழிபாடு: குரு என்ற சொல்லில் கு என்பது பாசத்தையும் ரு என்பது அழித்தலையும் குறிக்கும் வழியாக இருக்கும் ஆசாரியனை. எனவே உயிர்களின் பாசத்தை அழிப்பதற்கு குரு என்றுகூறுவார்கள். பரிபக்குவம் பெற்ற உயிர்களுக்குப்பாசத்தை நீக்கிப் பேரின்பம் கொடுத்தற்கு இறைவனே மனிதவடிவில் குருவாகவருவான் என்று ஆகமங்கள் கூறுகின்றன. மாணிக்கவாசகர்க்கு இறைவனே குருவாக வந்து உபதேசம் செய்தான். இனிப் பரிபாகம் பெற வேண்டியவர்களுக்கு இறைவன் நேரே வெளிப்படாமல் மனிதருள் ஒருவரை அதிட்டித்து அவர்வழியாக அருள் புரிவான்.

மனிதருள் ஒருவராகிய குரு தோத்திர சாத்திரங்களில் வல்லவராயும் தீட்சை பெற்றுச் சிவபூசை செய்து சிவோகம் பாவனையால் சிவனருள் நிரம்பியவராயும் இருப்பார். எனவே அந்தக் குருவை மனிதருள் ஒருவராகக் கருதாமல் சிவனுகவே பாவித்து வழிபட வேண்டும். குமர குருபர அடிகள் தமது குருவாகிய மாசிலாமணி தேசிகரை இறைவனுகவே பாவித்து வழிபட்டார்.

குருவைக் காணச்செல்லும்போது வெறுங் கையுடன் செல்லலாகாது. பழம் முதலியவற்றைக் காணிக்கையாக வைத்து வழிபட வேண்டும். அவரிடம் தீட்சை பெற்று அவர் சொல்லும் ஞான உபதேசங்களை ஒரு மனதாய்க் கேட்க வேண்டும். அவருக்கு வேண்டிய தொண்டுகளையும் செய்ய வேண்டும். அவர் சொல்லியபடி நடந்துவரவேண்டும்.

இவ்வாறு தமது குருவை வழிபட்டு வருவதோடு சமய ஆசாரியர்கள் சந்தான ஆசாரியர்கள்

முதலான ஆசாரியர்களுக்கு அவ்வவரது திருநாட்களில் குருபூசை நடத்தி வருதலும் குருவழி பாட்டில் அடங்கும்.

லிங்க வழிபாடு: லிங்கம் என்பது குறி அல்லது அடையாளம் என்று பொருள்படும். கண்ணால் காணுமாறு வரிவடிவ எழுத்தாக எழுதிக் காட்டுகிறோம். அதுபோலவே கண்ணால் காணமுடியாத பரம் பொருளாகிய இறைவனைக் கண்ணால் கண்டு வழிபடுவதற்காக நமது முன்னோர்கள் வகுத்துக் கொடுத்த அடையாளமே லிங்கமாகும். திருக்கோயிலில் மூலத்தானத்தில் பீடமும் அதன் மேல் குழவியுமாய் அமைந்த உருவத்தை லிங்கம் என்று கூறுவது வழக்கில் இருக்கிறது. அதுமட்டுமேயன்றி இறைவனாக அமைக்கப் பட்ட எல்லாத் திருமேனிகளும் லிங்கமாகிய அடையாளங்களே. எனவே இறைத் திருமேனிகளைக் கல் என்றும் செம்பு என்றும் இகழாமல் அவற்றுள்ளே எழுந்தருளும் இறைவனாகவே அவற்றையும் பாவித்து வழிபட வேண்டும்.

லிங்கம் ஆன்மார்த்தம், பரார்த்தம் என இருவகைப்படும். தாம் தாம் வழிபடுதற்காகக் குருவிடமிருந்து எழுந்தருளுவித்துக் கொண்டது ஆன்மார்த்த லிங்கமாகும். எல்லாரும் வழிபடுவதற்காகத் திருக்கோயிலில் எழுந்தருளுவிக்கப் பெற்றது பரார்த்த லிங்க மாகும். மேலும் லிங்கத் திருமேனியானது சுயம்பு, காணம், தைவிகம், ஆரிடம், மானுடம் என ஐவகைப்படும். உளியால் செதுக்கப் படாமலும் பிறரால் தோற்றுவிக்கப் படாமலும் தானே தோன்றியது சுயம்பு லிங்க மாகும். சிவகணங்களால் தோற்றுவிக்கப்பட்டது காண லிங்க மாகும். தேவர்களால் ஸ்தாபிக்கப்பட்டது தைவிக லிங்கமாகும். ரிஷிகளால் நிறுவப் பெற்றது ஆரிட லிங்கமாகும். மனிதர்களால் நிறுவப்பெற்றது மானிடலிங்கமாகும்.

லிங்க வழிபாடு செய்வோர் குருவிடம் தீட்சை பெற்றுக் கொள்ளவேண்டும். உள்ளும் புறமும் தூய்மை உடையவராக இருக்க வேண்டும். திருநீறும் உருத்திராக்கமும் தரிக்க வேண்டும். சண்டேசுவரர், சேரமான் பெருமாள் முதலியோர் ஆகம விதிப்படி லிங்க வழிபாடு செய்தவராவர். கண்ணப்பரும் சாக்கியரும் ஆகமத்தைப் பின்பற்றாமல் இறைவன் உணர்த்திய திருக்குறிப்பின்படி வழிபட்டவராவர். பூசலார் மனத்துக்குள்ளேயே அகபூசைசெய்தவராவார் திருநீல நக்கர், புகழ்த்துணையார் என்போர் பரார்த்த லிங்க வழிபாடு செய்தவராவர்.

திருக்கோயில்களில் நாள் வழிபாடு செய்வதோடு திருவிழா எடுத்தலும் குடமுழுக்குச் செய்வித்தலும் லிங்க வழிபாட்டில் அடங்கும்.

சங்கம வழிபாடு : சங்கமம் என் பதுகூட்டம் என்று பொருள்படும். ஈண்டு இச்சொல் அடியார் கூட் டத்தைக் குறிக்கிறது. அடியார் கள் என்போர் இறைவனிடம் அளவற்ற அன்புடையவராவர். அவர்கள் ஏதாவது ஒரு தொண் டை மேற்கொண்டு அதனை உறைப்புடன் (விடாப்பிடியாகச்) செய்து வருவார்கள். அந்த உறைப்பின் காரணமாக இறைவன் அவர்களிடம் விளக்க மாக எழுந்தருளி இருப்பான். எனவே அடியார்களை மனிதருள் ஒருவராகக் கருதாமல் சிவனுகவே பாவித்து வழிபட வேண்டும்.

மற்றும் அடியார்களைச் சாதி வேறுபாடுபற்றி இழிவாக எண் ணுமல் சிவனுகவே எண்ணவேண் டும். அங்கமெல்லாம் குறைந்து அழுகுதொழு நோயராய் ஆவுரித் துத்தின்றுழலும் புலையரேனும் கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பராகில் அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே என்ற அப்பரடிகளின் திருவாக்கால் இதனை அறியலாம். மற்றும் பல் வேறு வகைப்பட்ட சாதியாரான அடியார்களை எல்லாம் ஒரே நிர லாக வைத்துச் சுந்தரர் திருத் தொண்டத் தொகை பாடிப் பரவினர். உவர்மண் ஊறி உடல் வெளுத்து வந்த வண்ணுரை இழி வாக எண்ணுமல் சேரமான் பெரு மாள் யானையிலிருந்து இறங்கி வந்து வணங்கினுர்.

அடியாரை வணங்காமல் இறைவனை மட்டும் வணங்கினுல் அதனை இறைவன் ஏற்கமாட் டான். இக்கருத்தைச் சிவஞான சித்தியார் என்ற நூல் ''ஈசனுக் கன்பில்லார் அடியவர்க் கன்பில் லார்'' என்று குறிக்கிறது.

அடியார்களைக் கண்டால் உச்சி மேல் கைகுவித்தும் கீழ் வீழ்ந்தும் வணங்க வேண்டும். எதிர் சென்று இன்னுரை கூறி இல்லத்துக்கு அழைத்து வந்து ஆசனத்தில் அமர்த்தித் திருவடிகளைப் பூசிக்க வேண்டும். அவ்வடியார்களுக்கு உண்டி நாலு விதத்தினில் ஆறு சுவைத் திறத்தினில் அமுதூட்ட வேண்டும். யாதொன்றும் நம் பக்கல் உண்டெனில் அது அடி யார் உடைமை என்று கூறி, அடி யார் வேண்டியதை அவருக்கு மன முவந்து கொடுக்க வேண்டும்.

இளையான் குடி மாறர், சிறுத் தொண்டர் முதலியோர் அடி யார்களை வரவேற்று உபசரித்து அமுது படைத்தவராவர். மானக் கஞ்சாறர் முதலியோர் அடி யார் விரும்பியதை மனமுவந்து கொடுத்தவராவர்.

தத்தம் காலத்து அடியார் களுக்கு அமுதூட்டுவதோடு பேரின்பப் பெருவாழ்வு எய்திய நாயன்மார் முதலியோரது திரு நாட்களைக் கொண்டாடுவதும் சங்கம வழிபாட்டில் அடங்கும்.

முடிவுரை : இது காறும் குரு லிங்கம் சங்கமம் என்ற மூன்றை யும் வழிபடும் முறையையும், அங் ஙனம் வழிபட்ட வாற்றுக்குச் சில எடுத்துக்காட்டுகளையும் கண் டோம். இதனுல்இவ்வழிபாட்டின் அவசியத்தை யாவரும் அறிந்து கொள்வதோடு தத்தம் ஆற்ற லுக்கு ஏற்ப இவ்வழிபாட்டை மேற்கொண்டு ஒழுகி இறையருள் பெறுவாராக.



# நூல் நிறை

## சாமியே சரணம்

[ஆசிரியர் திரு. டி. ஏ. துரைராஜ் பக்கங்கள் 4+32 விலை ரூ 1 வெளியீடும், கிடைக்கும் இடமும்: கிரிடிரேடிங் ஏஜென்ஸி, 10, சன்னதித் தெரு, மயிலாப்பூர், சென்னை 4.]

ஸ்ரீ தர்ம சாஸ்தா சிலர் வாழ்வில் நிகழ்த்திய அற்புதத் திருவிளையாடல்களைக் கற்பனை மெருகுடன் திரு. டி. ஏ. துரைராஜ் அவர்கள் நாடகமாக்கித்தந்துள்ளார். இந்நாடகம் திரு. எம். என். நம்பியார் அவர்களும் மற்ற சிறந்த நடிகர்களாலும் நடிக்கப் பெற்று வானொலியில் ஒலி பரப்பப் பெற்றது. 'நாஸ்திகர்களையும் ஆஸ்திகர்களாக மாற்றியுள்ளது' என்று திரு. எம். என். நம்பியார் விமரிசனத்தில் குறித்துள்ளார்.

சிறுநாடகமானாலும் பக்திப் பயிர் வளர்க்க அற்புத உபாயங்கள் நிறைந்தது. நாடகலட்சணங்கள் நன்கு அமைந்துள்ளன. உள்ளத்தைத் தொடும் அரிய வசனங்கள் நிறைந்தது.

## அமரபாரதி

### மாத இதழ்

[ஆசிரியர் திரு. ரா. விழிநாதன். பக்கங்கள் 64. தனிப்பிரதி ரூ. 1-50 ஆண்டுச் சந்தா ரூ 17 முகவரி: அமர பாரதி, 12, கிழக்குத் தெரு, மேற்கு சி. ஐ. டி. நகர், சென்னை 600035]

இதுவரை எட்டு இதழ்கள் வெளிவந்துள்ளன. இந்து சமயத்தின் மேன்மைகளை உணர்த்தும் அரிய கட்டுரைகள் வெளிவருகின்றன. அக்டோபர் இதழில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி அவர்கள் அக்னிஹோத்ரம் ஸ்ரீ ராமானுஜ தாத்தாச்சாரியார், தி. ஐ. ர. தஞ்சை என். தாதா சாரியார் ஆகிய பெரியவர்களின் கட்டுரைகள் வெளி வந்துள்ளன. அச்சுஅமைப்பு, செய்திகள் சேகரிப்பு, தொகுப்புக்கலை முதலிய இதழியல் வெற்றி நிலைகள் அனைத்திலும் சபாஷ் பெறுகிறது அமரபாரதி.

சமய இதழ் நடத்துவதில் உள்ள சிரமத்தைப் புரிந்துகொண்டு ஆத்திக அன்பர்கள் இவ்விதழின் வளர்ச்சிக்கு நன்கு உதவ வேண்டும்.

## ஓம் நம சிவாய ....
### (மகாலிங்க மகிமை)

[ஆசிரியை: வைத்திய விசாரதை திருமதி. டி. எஸ். ஜனககுமாரி பக்கங்கள் 40. விலை ரூ 2. பதிப்பாசிரியர் திரு. டி. கே. கோவிந்தன் வெளியீடும் கிடைக்குமிடமும்: ஜகஜோதி பிரசுரம், திருவிடை மருதூர் - 612 104 (தஞ்சை மாவட்டம்)]

பதினான்கு வைத்திய நூல்களும் ஆறு ஆத்திக நூல்களும் இயற்றிப் பிரசித்தி பெற்ற எழுத்தார் டி. எஸ். ஜனககுமாரி அவர்கள். அவர்களின் ஏழாவது ஆத்திக வெளியீடு 'ஓம் நம சிவாய' என்னும் தலைப்பிலமைந்த மகாலிங்க மகிமை. ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதி பதி ஜகத்குரு ஸ்ரீஸ்ரீ சுவாமிகளின் ஆக்ஞை நூலின் முற்பகுதியாக அமைந்து அலங்கரிக்கிறது. சகல நன்மைகளையும் உண்டாக்கக் கூடிய ம்ருத்யுஞ்ஜய ஸ்தோத்திரம், ஸ்ரீ சிவலிங்காஷ்டகம், ஸ்ரீ சிவ பஞ்சாக்ஷரம் ஷ்தோத்திரம், மார்க்க பந்து மகிமை ஆகியனவும் இந் நூலில் உள்ளன.

சிவன் உமை பலவண்ணப் படமும் ஸ்ரீ ராமநாத சுவாமி, பர்வத வர்த்தினி பலவண்ணப் படமும் இணைக்கப் பெற்றுள்ளன. அட்டை யில் ஸ்ரீ மகாலிங்க சுவாமி திருவுருவம். இம்மூன்றுமே பூஜையறையில் வைத்து வழிபடத்தக்கன.

சிவ நாமா வல்யாஷ்டகம் உரையுடன் இத்தொகுப்புநூலுள் வெளியிடப் பெற்றுள்ளது. ஆசுதோஷி (மகிழ்ந்து வரமளிப்பவன்) என்ற திரு. பி. சுந்தரராமன் அவர்களின் கட்டுரை கருத்து நலம் சான்றது.

அற்புதமான தொகுப்பு. ஆத்திகர்கட்கு அவசியம் தேவைப்படும்.

## திருவிளையாடற் புராணம் - உரைநடை
### 1. மதுரைக் காண்டம்

[ஆசிரியர்: பரஞ்சோதி முனிவர், உரைநடை ஆக்கம்.வித்துவான் திரு. தி. பட்டுசாமி ஓதுவார், பக்கங்கள் 4 + 192 விலை ரூ. 4.வெளியீடு ஸ்ரீ காசிமடம் திருப்பனந்தாள், கிடைக்குமிடம்: நிர்வாக ஆசிரியர் 'ஸ்ரீ குமரகுருபரர்' ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் அ. கு. எ. 612 504 தஞ்சை மாவட்டம்]

தமிழ் நாட்டில் இவ்வுரைநடை மிகவும் பிரசித்திபெற்றது. இது இரண்டாவது பதிப்பு. பாகம் பாகமாக வெளிவருகிறது. ஸ்ரீ குமர குருபரர் இதழ்ல் தொடர்ந்து வெளியிடப் பெற்றது. நூல் வடிவில் ரௌத்திரி விஜயதசமி வெளியீடாக வெளிவந்துள்ளது. மூலத்துக்கு மாறுபடாத எளிய இனிய விளக்கமான உரைநடை.

# மலைவளர் காதலியம்மன் பேரில்
## சந்த விருத்தம்

1. மணிமுடி வைத்தெழி லரசுசெ லுத்திநல்
வளமது துய்க்கினு மறிவாரோ
பிணிதவிர் வித்துயிர் செலுமுன நற்கதி
பெறும்வழி பற்றநின் னிலைதேரார்
அணிதிகழ் பொற்பத மெனதுளம் வைத்துன
தடியரோ டொத்திட வருள்கூர்வாய்
பணிபவ ருக்கிரு தயநிறை மெய்ப்பொருள்
பருவத வர்த்தனி யுமையாளே.

2. அழகும தற்கிசை நிதியுமி குத்ததில்
அறிவழி துர்க்குண முறவாமோ
[1]இழகும னத்துட னுனதடி யைத்தொழு
தினிய தமிழ்ச்சொல வருள்கூர்வாய்
மழவிடை யிற்பொலி பரமனி டப்புறம்
மருவிய அற்புத மிகுதேனே
பழமறை யிற்பொரு ளெனவுயர் தற்பரை
பருவத வர்த்தனி யுமையாளே.

3. விரிகடல் சுற்றிய புவிமிசை யற்பர்கள்
வெடுவெடெ னச்சொல அவர்பால்நான்
உரிமை செலுத்தியென் மெலிவது செப்பியுள்
உடைவது பொற்பல வருள்வாயே
அரியணை யிற்றிரு முடிமுடி வைத்தெழில்
அரசு செலுத்திய பெருவாழ்வே
பரிபுர பொற்பதம் அடியர் பெறத்தரு
பருவத வர்த்தனி யுமையாளே.

4. மனிதரு மக்களும் உறுதிசொல் இட்டரு
மனைவியு நிச்சய மெனவினை
இனியபொ ருட்கவ ரறிவழி துட்டனை
இணையடி பத்திசெய் வகைபாராய்

---

1. இழகு - இளகு. எதுகை நோக்கி ளகரம் ழகரமாயிற்று

கனிநறை கொட்டிய பொழிலிடை முத்தெறி
கடலடு கிற்பொலி நகர்வாழ்வே
பனிசொரி வெற்பிறை மகிழ்வர புத்திரி
பருவத வர்த்தனி யுமையாளே.

5. முதுவட வைக்கன லெனமுனி துர்க்குணர்
முகமனு ரைத்திடில் இசைவாரோ
மதுமலர் கொட்டிநி னடியிணை யைத்தொழு
மனமும் ஒழுக்கமும் அருள்வாயே
விதுமுடி பெற்றிடு முதைத்தலின் முக்கணர்
வெருவியி ணங்கிய மொழியோடே
பதும மலர்த்திரு அடிவடுள் பொற்குழை
பருவத வர்த்தனி யுமையாளே.

6. கவனம தக்களி றெனமுர ணுற்றிடு
கசடரை யுத்தம ரெனவீணே,
அவரவ டுக்கிசை யுரைபல செப்பிய
அவதித விர்த்துநின் அருள்கூர்வாய்
குவளையி டற்றரன் மனதுகு ழைத்திடு
குதலை பயிற்றிய மொழியாலே
பவள விதழ்க்கனி யமுத மருத்திய
பருவத வர்த்தனி யுமையாளே.

7. முரண்பல முத்தொழில் களில்வலை யிற்படு
முயலதை யொத்துள மெலிவேனோ
திரண்மறை யுச்சியின் மிசைபொலி யற்புதத்
திருவடி யைத்தொழு துருகேனு
அரகர தற்பரை யெனநினை யுட்கொளு
மவரர சுற்றிக முறமேலோர்
பரகதி பெற்றிட விரமெளி திற்புரி
பருவத வர்த்தனி யுமையாளே.

8. சுகமு முயற்சியு நிலையென வுத்தமர்
தொடர்பு மருத்தியு முணராதே
அகமகிழ் விற்பல கெடுதொழி லைச்செயில்
அதுதமி யற்குறு துணையாமோ
சகலசெ யற்களு முடலிலு ளைப்பொதி
தகைமை யரர்க்கெனி லெவர்தாளோ
பகடு நடத்திய நமனையு தைத்தது
பருவத வர்த்தனி யுமையாளே.

9. அரசரெ னச்சொலலோர் பெருமை படைத்தெளி
யரைவெகு கற்பனை செயநேர்வார்
சரணம் வழுத்திய வெனைமெலி வித்திடு
தகுதிய வர்க்கிலை அருள்கூர்வாய்
விரலரி பத்திசெய் பரமனி டப்புறம்
மிளிர்சிலை பட்டுடை யினைசேரார்
பரவை மகத்துவ மிகுநக ரிற்பொலி
பருவத வர்த்தனி யுமையாளே.

10. துகளிலி ணைப்பத முளமிசை வைத்தது
துதிசெயு முத்தம ரொடுகூடா
தகடுவ ளர்ப்பது பெரிதென வுற்றலை
வவதி தவிர்த்தருள் புரிவாயோ,
திகழுயில் பெற்றட லசுரர்ப டப்பொரு
திறலின் மிகுத்தசண் முகவேளே
பகரடு மைத்திரு மகனென மெச்சிய
பருவத வர்த்தனி யுமையாளே.

---

## இதமான வாழ்வுக்கு எளிய வழிகள்

(அ) வாயு வயிற்றுப் பொருமலுக்கு

பெரண்டையைக் காரமில்லாமல் துவையல் செய்து சாப்பிட்டு வந்தால் வயிற்றில் ஏற்படும், வாயு,வயிற்றுப்பொருமல் குணமாகும்.

(ஆ) தோலில் ஏற்படும் வெண்மை நிறம் மாற

நாட்டு குண்டுமணியின் இலையின் சார் எடுத்து உடலில் வெண்மை நிறம் உள்ள இடத்தில் தடவி ஒரு மணி நேரம் வைத்திருக்க வெண்மை நிறம் மாறும்.

(இ) முகத்திலுண்டாகும் பருக்கள் நீங்க

துத்தி இலையை அரைத்துப் பருக்கள்மேல் தடவி வரப் பருக்கள் நீங்கும்.

டாக்டர் N. சடையப்பன், S. M. P.

# முத்துக்குமார சுவாமி பிள்ளைத் தமிழில் - சைவ சித்தாந்தக் கருத்துக்கள் -

## பெருமான் பெருமை

## "மா மோகினிக்கு மணாளன்"

மகாவித்துவான் சு. தண்டபாணி தேசிகர்

மோகினிக்கு மணாளனாக இருந்தால் தன் செயலற்று அவள் செயலே தன் செயலாக மயங்கிக் கிடக்க வேண்டுமே! இதுதானே உலகியல். வேளூர்வைத்திய நாதப் பெருமான் அவளை மயங்க வைக்கிறாரேயல்லாமல் தான் மயங்குவதில்லையாம். தில்லையில் சிவத்தைக்காமிப்பவள் தானே சிவகாமியாக விளங்குகிறாள். அதுபோல வைத்தியநாதப் பெருமானும் தன்னால் அவள் மோகமடையச் செய்கிறாராம். இந்தக்கருத்தை நம் மனத்திற் பதிக்கவே, சுவாமிகள்

''காமாரியை ... கவுமாரியைப்
போல் திருவிழிமுன் நிற்கும்
வடிவழகுடைக் கடவுள்
மாமோகினிக்கு மணாளனே''

என்றருளிச் செய்கிறார்கள்.

உலகில் உயிர்களுக்குக் காமத்தைத்தூண்டி இச்சையைப் பிறப்பிப்பவன் மன்மதன். அவன் அம்பிற்கு இலக்காகாதவர்கள் உலகில் யாருமேயில்லை. அத்தகைய அவன் சிவபரம்பொருளிடம் தன்கை வரிசையைக் காட்டப் போக அவருடைய நெற்றிக் கண்ணால் வெந்து நீறானான். அவர் காமாரி ஆனார். அவரிடத்திலே மோகினி மயங்குமா? மயக்குமா? மயங்கத்தான் செய்தது என்பதைக் ''கவுமாரியைப் போல் விழிமுன் நிற்கும்'' என்ற உவமத்தொடரால் விளக்குகிறார்கள். கவுமாரியும்சிவத்தைக்கண்டு காமித்தாள் அவள் காமிப்பது உயிர்களைப் படைப்பிற்படுத்தவும் படைக்கல் பெற்ற உயிர்களைக்காக்கவுமே. கவுமாரிபோனின்ற கடவுள் மாமோகினி உயிர்களைக் காப்பதற்காக மட்டும் கவுமாரி போல் நின்றாள்; காமித்தாள். சத்தன் வேண்டிற்று எல்லாம் ஆதலே சத்தியின் இயல்பு. அவளும் ''எத்திறம் நின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்'' ஆகையால் கடவுள் மாமோகினியும்கவுமாரி போல் நின்றாள் என்ற சாத்திர நுணுக்கம் அனுபவிகட்கு அமுதமாவதொன்று.

மற்றொன்று; ''சூக்கும வெளியினிற் பரமநடம் நவிற்றுதிறல்'' வெளி-ஆகாயம். காற்றுமுதலான

உணர்ச்சிகட்குப்புலனுகக் கூடிய பூதங்களை உலகாயதன் கூட இல்லை என்னுன். அவனைப் பார்த்து காற்று முதல் நிலமீருன இத்தனைப் பூதங்களும் வாழ இடங் கொடுத்துக்கொண்டு இருப்பது எது என்று கேட்டால், இருக்கத்தான் வேண்டும் எனச்சிந்திப்பான். ஆனுல் பொறிகளால் உணர முடியாமையால் ஒத்துக்கொள்ளமாட்டான். ஆனுலும் அவனுடைய உள்மனம் அவனுடன் போராடிக் கொண்டேதான் இருக்கும். இதுபருப்பூதமாகிய பூதாகாசத்தின் இலக்கணம். இப்படியிருக்க, அறிவேயுருவான வெளி ஒன்றுண்டாம். அது சூக்கும வெளி என அழைக்கப்படுமாம். சூக்கும ஆகாயம் என்றவுடனே இந்தப்பூதாகாசம் தோன்றுதற்குக் காரணமானதும் தன் மாத்திரைகளில் ஒன்றுனதுமான ஓசை என்று எண்ணிவிட வேண்டாம். ஏன் எனில் நுண்உணர்வால் ஓசையைக் கொண்டு அதாவது நாதத்தைக் கொண்டு சருதியறியகூடிய வெளி ஒன்றுண்டு. அது தான் சூக்கும வெளி. அது "பரம வியோமம்" என்று ஆகமங்களில் அழைக்கப்பெறுகின்றது. அந்த வெளியில் பரசிவம் நீக்கமற நிறைந்திருக்கிறது. இதனைப் பத மந்திரம் "வியோம வியாபினே, வியோமரூபாய" என்று சூக்கும வெளியாக இருப்பவனும், அதில் வியாபித்து விளங்குபவனும் சிவனே என்கின்றது. இத்தகைய வெளியில் ஒலியும் ஒளியுமாக நின்று ஐந்தொழில் அருநடம் செய்கின்ருர் என்பது நமது சமய சாத்திரம். அதனைக்

கற்பனை கடந்த சோதி கருணையே
வடிவமாகிச்
சிற்பர வியோம மாகும்
திருச்சிற்றம் பலத்துள்நின்று
பொற்புடன் நடஞ்செய்கின்ற
பூங்கழல் போற்றி போற்றி

என்ற செய்யுளும் விளக்குகிறது.

சூக்கும வெளியாகிய பரம வியோமத்தை இப்படி நூன்மேற்கோள்களைக் கொண்டுதான் நம்ப வேண்டுமா? அதனை நாம் அறிந்து அனுபவிப்பதெப்படி என்ற ஐயம் எழுதல் இயல்பே. அதனை,

ஈசானம் நிருத்த ரூபம்து
பஞ்சமந்திராதிமகம் பரம்
பிரம்மரந்த்ரே சிவம் வித்யாத்
ஊர்த்துவே நிருத்தம் விசிந்தயேத்

என்ற காரணுகமம் பஞ்சபிரம மந்திர வடிவராகியும் நிருத்த ரூபராகியும் உள்ளபரசிவத்தைநம் பிரமந்திரத்திலும் அவருடைய நடனத்தை அதன்மேல்தியானிக்க உச்சிக்கு மேல் 12 அங்குலமேபர வெளி அதில் தேவதேவரான பரசிவம் ஆனந்த நிருத்தம் புரிகின்ருர் என்கின்றது.

இங்ஙனம் இறைவன் இயற்றுகிற நடனம் தூலம்-சூக்குமம்-பர நடனம் எனமூவகைப்படும் அவற்றுள் தூலநடனம் என்பது உயிர்கள்மலகன்மங்களோடுகூடிக்கிடக்கின்ற கேவல நிலையில், அவைகளை

ஊட்டிக் கழிப்பதற்காக உதவும் உடல் கருவிகரணங்கள் உலகு இவற்றைப்படைத்தல் முதலாகிய ஐந்தொழில்களைச் செய்யும் நடனர். இதனையே சிவஞான போதத்து முதற் சூத்திரம் தெரிவிக்கிறது.

சூக்கும நடனம் என்பது பரசிவம் சங்கற்ப மாத்திரையான் சகல நிலையில் ஐந்தவத்தைப்படும்உயிர்கட்கு முதலுதவியாக அருளை வைத்து ஆன்ம சித்தியை அறியச்செய்யும் நடனம். அப்போது ஆன்மா தன் சிற்சத்தியையும் அதனைக்காந்தரில் கண்ட இருப்பு போலத் தன்மயமாக்கி நிற்கும் அருளாகிய சிவசத்தியையும் அறியாது. ஆதலால் இது சூக்கும நடனமாயிற்று. இதனையுணர்த்துவது ஐந்தாப்சூத்திரம்.

ஞானநடமாகிய பரநடம், முத்தி நிலையில் உயிர்களுக்குத் தன்னைக்காட்டி-காணும் நடனம். இது பரநடனம் எனச்சிறப்பித்து சிவஞான போதம் பதினொராஞ் சூத்திரத்துக் கூறப்படுகிறது. இதனையே நமது சுவாமிகள் ''சூக்கும வெளியிற் பரம நடம் நவிற்றுதிறல்'' என வியக்கின்றார்கள். ஆகவே சூக்கும வெளி என்பது துவாத சாந்தப்பெருவெளி. பரம நடம் என்பது ஆன்மாக்கள் முத்தி நிலையில் அயரா அன்போடு திருவடியையே பற்றி நிற்கக் காட்டிக் காணும் உபகார நடம் என்பது பெறப்படும். இத்துணை நயத்தை ஒரு சிறு தொடரில் உணர்த்தும்சுவாமிகளின் உபதேசவுரை வியத்தக்கது.

''எழு பெரும் புவனமுழு
தொடுங் குதவும் இறைவியென்று
மறை கையெடுத்தார்க்கவும்
இடைநுடங்கு மட நடையிளங்
குமரி என இருந்தகன கள்வி''

கள்ளம்-பிறர் பொருளை வவ்வுதல் மட்டும் கள்ளமாகாது. தன்னுடைய செயலை—குணத்தை ஒழுகலாற்றை—பெயரை மறைப்பதுகூடக் கள்ளந்தான். அம்மை தையல் நாயகி கோடிக்கணக்கான உயிர்களை ஒரு சேரப் பெற்றவள் ஆனாலும் தன்னை இளங்குமரி என உடலமைப்பாலும், நடையாலும் தன்னை பிறர் நம்பும்படி நடந்து கொள்பவள். அதனால் பெரிய கள்வி ஆகிறாள் இந்தப்பகுதியில், சித்தி நெறி காட்டும் ஆதீனத்தின் அருட் கருத்து அடங்கியிருக்கிறது.

''சிவம் சத்தி தன்னையீன்றும் சத்தி
தான் சிவத்தையீன்றும்
உவந்திருவரும் புணர்ந்திங் குலகு
உயிர் எல்லாம் ஈன்றும்
பவன் பிரமசாரியாகும்பான்
மொழிக் கன்னியாகும்
நவந்தரு ஞானத் தோர்க்கிந்நன்
தான் தெரியுமன்றே'' [மை]

(சித்தியார் 77)

இந்நூற் பகுதி காட்டுகிறது; சிவத்தின் மகள் சக்தி; சக்தியின் மகன் சிவன். இருவரும் கூடினார்கள்; உலகனைத்துய தோன்றின; உயிர்கள் அனைத்தும்

தோன்றின. இவ்வளவையும் பெற்றவன் பிரமசாரியாம். பெற்றவள் மணமாகாத கன்னிப்பெண்ணாம். இதனையே நமது சுவாமிகள் சிதம்பரசெய்யுட் கோவையில் இச்சித்தி திருவிடுத்தத்தின் முதற்பகுதியை,

"அனக நாடகற் கெம்மன்னை, மனைவி தாய் தங்கை மகள்'' என்றும் சொல்லிக் காட்டுகிறார்கள்.

''இதய புண்டரீக மலரில்
எந்தையொடும் இனிதமர்ந்த
ஒரு செல்வி''

நம்முடைய இதயம் ஒடு தாமரை மொட்டுப்போன்றது. கீழ்நோக்கி வளைந்திருப்பதுபதினாறுஇதழ்களையுடையது. அதன் நடுவிலே உள்ள பொகுட்டின் மேலே நம் கட்ட விரலளவுள்ள ஒரு வெளியுண்டு. அதில் ஞான ஒளி மயமான சிவம் பிரகாசித்துக் கொண்டேயிடுக்கிறது. அம்மொட்டினைநம் தியான யோக வன்மையாய் நிமிர்த்தி மலரச் செய்து சிவத்தைக் கண்டு கொண்டே இடுப்பதே நாம் செய்யும் தியானம் பூசைமுதலான வழிபாடுகள் என்று அகோர பத்ததி அறிவிக்கிறது.

''பிரமபுரத்திலே (உடலில்) தகராகாச புண்டரிகம் உள்ளது; அதில் உள்ள பிரமப் பொருள் தேடத்தக்கது; அறியத்தக்கது'' எவர் எல்லாம் அறிந்தவரோ! உலகத்திலுள்ள மகிமைகள்யாவும் எவருடையனவோ! அவர் தகராகாச பரம வியோமத்தில் உள்ளார். அவர் அறிவுருவானவர்; உயிர்களை இயக்குபவர்; அவரை ஞானிகள் அருள்ஞானத்தால் தேடுகிறார்கள்'' என்கிறது.

— முண்டகோபநிடதம் (2...2 ..1)

இத்தகைய இதயத் தாமரை என்னுடையதியானயோகத்தால் மலர்ந்தபோது அதில் அம்மை தன் மணாளனோடு எழுந்தருளியிருக்கிறார். உணர்வரிய மெய்ஞ்ஞானத்தை உணரச் செய்கிறார்; ஆன்மாக்களை ஆனந்த வெள்ளத் தழுத்துகிறார். இவ்வளவும் அருட்சத்தி செய்யும் உபகாரம். இத்தகைய உபகாரத்தைச் செய்யும் அவள் ஒரு செல்வி என்கிறார்கள். இவ்வளவும் பரிபாகமுற்ற ஆன்மாக்களுக்கு அருட்சத்தி செய்யும் உபகாரம் என்கிற அனுபவக் கருத்து.

உலக சிருட்டியைக் குறிக்கும் அற்புதமான பகுதி :-

''கும்பாதி காரியமெனத் தமை நிமித்தமாக் கொண்ட அகிலாண்டங்களின் குழுவுக்கு''

உலகம் தோன்றி நின்று மறைதலால் அங்ஙனம் தொழிற்படுத்த ஒருமுதல்வன் வேண்டும். உலகத்தைத் தோற்றுவிக்க முதற்காரணம் ஒன்று இன்றியமையாதது. முதல்வன் காரியப்படுத்த ஏற்றதொருதுணைக்காரணம் வேண்டும்

இந்த மூன்றும் இருந்தால் அல்லது ஒருகாரியம் முடிவுறாது.

உதாரணமாகக்குடம் படம் முதலியவற்றை எடுத்துக்கொள்வோம். குடம் காரியம். அது இத்தகைய தன்மையில் பயன்பட மண்ணாகிய முதற்காரணம் தண்ட சக்கரங்களாகிய துணைக்காரணம், குயவனாகிய நிமித்த காரணம் வேண்டப்படுவதைக் கண் கூடாகப்பார்க்கிறோம். அதுபோல உலகமாகிய காரியம் முற்றுப்பெற மாயையாகிய முதலும், சத்தியாகிய துணையும், குயவனாகிய இறைவனும் வேண்டப்படும்,

இதனை,

காரிய காரணங்கள் முதல் துணை
நிமித்தங்கண்டாம்
பாரில் மண் திரிகையாகப்
பண்ணுமவன் முதல் துணை
நிமித்தம்
தேரின் மண் மாயையாகத்
திரிகை தன் சக்தியாக
ஆரியன் குயவனாய் நின்றாக்குவன்
அகிலம் எல்லாம்

(சித்தியார்-18)

என்ற சித்தித் திருவிருத்தம் காட்டும் இதனைத்திருவுளங்கொண்டே சுவாமிகள் அருளுகின்றார்கள். இச்செய்யுளில் ''தமை'' என்றது சிவமாகிய தம்மை எனச்சிவபரம் பொருளையே குறிக்கும். சக்தி துணைக்காரணமேயன்றி நிமித்தமாகாமையின்.

'இருவர் குறியும் தலைக்கூடினும்''

அநாதி முத்த சித்துருவாகிய சிவத்தின் வடிவம் அருவம் உருவம் அருவுருவம் என மூன்றுமாகும். ''மூன்றும் சொன்ன ஒருவனுக்குள்ள வடிவமே'' என்கிறது சித்தியார். இவற்றுள் அருவும் உருவுமான திருமேனி சிவலிங்கத்திருமேனி. இது பாதி புலப்படுவதாயும் பாதி புலப்படாததாயும் இருப்பது என்பதனை முதற்கண்ணே இதய குகையில் பாதிபுலப்பட்டதாயும் அதாவது சகளத்திருமேனியாயும், பாதி புலப்படாத அதாவது நிஷ்களமாயும் வைக்கப்பட்ட சிவலிங்கத்தை (சன்மசாதாக்கியவடிவத்தை அறிந்தார்கள் என்னும் இருக்கு (9-68-5) மந்திரமும் அறிவிக்கிறது.

இந்த அரு உருத்திரு மேனியில் பாணமும் அதாவது ஆவுடையாரும், பீடமும் அதாவது சத்தியாக இணைந்திருக்கிறது இறைவன் அங்ஙனம் சிவ-சத்தி சேர்க்கை வடிவிலிருப்பதாலேயே உலகிலுள்ள உயிர்கள் அனைத்தும் ஆணும் பெண்ணுமான இருவேறு உருவங்களுடன் ஆளுமையும் அமைதியுமாகிய குணங்களுடன் வாழ்வனவாயின.

இங்ஙனம் பீடமும் சிவலிங்கமுமாகக்கூடியிருப்பினும் சத்திதான் செம்பாதியல்ல அனைத்தும் தன்மயமே என்பதற்குச் சர்வம் சக்திமயம் ஜகத் என்ற வேதவாக்கியத்தை பிரமாணமாக வைத்திருக்கிறார் என்கின்றார்கள்.

முத்தான்மாக்களுக்குச் சிவம் எங்ஙனம் அனுபவப்பொருள் ஆகிறது; உயிருக்குயிராய் விளங்குவதுயாங்ஙனம் என்பனபோன்ற உயரிய கருத்துக்களைக் குறிக்கும் பகுதிகளை அடுத்த இதழில் காண்போம்.

---

# பழந்தமிழ்ப் பதிப்பு அறிமுகம்

வித்துவான் தா. குருசாமி தேசிகர்

தமிழ் நாவலின் தந்தையாகிய மாயூரம் வேதநாயகம் பிள்ளை தமிழ் இலக்கியத்திற்குச் செய்த தொண்டு நூற்றுண்டுகள் தோறும் நினைவு கூர்ந்து போற்று தற்குரியது. தொல்காப்பியம் கூறியவாறு ''தொகுத்தல் விரித்தல் மொழிபெயர்ப்பு'' என்ற பகுப்பினில் நூற்பணியை வேதநாயகம் பிள்ளை சிறக்கச் செய்திருக்கின்றார். அவர் பல நூல்களின் ஆசிரியர் என்றாலும், மொழிபெயர்ப்புத் துறையில் சிறந்து பணிசெய்து அரிய நூல் களை வழங்கியிருக்கின்றார். அவற் றுள் 1862ம் ஆண்டு முதல் 1863ம் ஆண்டு வரை சென்னை உயர் நீதி மன்றத்தார் வழங்கிய ஆங்கிலத் தீர்ப்புகளைத் தமிழில் ''சித்தாந்த சங்கிரகம்'' என்று 1865ம் ஆண்டு வெளியிட்டிரு கின்றார்.

The Rulings in Tamil of the Highcourt of Madras From 1862 To 1863, Compiled by S Vedanayagam Pillai, District Moonsiff of Mayavaram-Madras -Printed at the United Scothish Press By Graves, Cookson and Co, 1865' என்று நூலின் முன் பக்கத்தில் காணப்படுகிறது. ஒரு நூற்றாண்டுக்கு மேற்பட்ட நூல் இது.

உயர்நீதி மன்ற முடிவுகளைத் தற்காலம் Law Journal என்ற இதழில் வெளியிடுகின்றனர். ஒரு நூற்றாண்டுக்கு முன்பு மேதை வேதநாயகம் பிள்ளை இவ்வாறு இதழ் மூலம் வெளியிடவேண்டிய செய்திகளை இரண்டாண்டுத் தீர்ப்புகளை-அன்று ஆங்கிலேயே நீதிபதிகள் வழங்கிய ஆங்கிலத் தீர்ப்புகளை தக்கதமிழில் மொழி பெயர்த்து வழங்கியுள்ளார். 'சித்தாந்த சங்கிரகம்'- என்ற நூலில் அதிகார அட்டவணை ஆங்கிலத்திலும், தமிழிலும் காணப்படுகிறது. அடுத்து பிழை திருத்தம் 'அபத்த பரிஹாரம்' என்றும், சுருக்க எழுத்துக் குறிப்பு 'சங்கேதாக்ஷர விவரணம்' என்றும் கூறப்பட்டுள்ளது. இது அக்காலத் தமிழ் மொழிபெயர்ப்பு நிலை.

இனி இந்நூல் 130 பக்கங்களை உடையதாய் உள்ளது பலதலைப்பு களில் நீதிமன்ற முடிவுகள் தமிழில் தரப்பட்டுள்ளன. TORT- என்ற ஆங்கில வார்த்தைக்கு 'அக்கிரம பரிகாரம்' என்று கூறப்படுகிறது. அதுபற்றி வேதநாயகம் பிள்ளை கூறுவது:

'அக்கிரமஞ் செய்தவர்கள் TORT என்ற அக்கிரம பரிகார வியாச்சியம் செய்யப்பட்டு அவர் களுக்குப்பிரதி கூலமாய்ப்பிறந்த தீர்ப்பின் தொகை முழுமையும் அவர்களில் ஒருவன் மட்டும் செலுத்துகிற பட்சத்தில் அவன் மற்றவர்கள் கொடுக்க வேண்டிய தொகையைப்பற்றி வியாச்சியம் செய்தாற் செல்லாது' (High court-Refer Page 411)

Priest என்ற தலைப்பிற்கு 'குரு' என்றுமொழியெர்த்துகிழ்க்கண்ட வாறு விளக்கி இருக்கின்றார்:—

'சகல பிரஜைகளுக்கும் அவர் களுக்கு இஷ்டமான மதாசாரங் களை அவலம்பிக்கலாம் என்பது பிரிட்டிஸ் கவர்ன்மென்றாருடைய ராஜரீக தர்மமாயிருக்கிறது. ஒவ் வொரு மதஸ்தர்களும் தங்களு டைய இச்சைப்படி மடாதிபதி முதலான ஆத்ம குருவை நியமித் துக்கொள்ளலாம். அப்படி நிய மிக்கக் கூடாது என்று யாராவது விக்நம் செய்தால் ஆத்ம குருவை நியமித்துக் கொள்ளும்படியான பாத்தியதையை ஸ்தாபித்துக் கொள்ளுவதற்காக ஷெ மதஸ்தர் கள்கோர்ட்டில் வியாச்சியம் செய் யலாம். (1861 - 1862 - உயர்நீதி மன்றத்தீர்ப்பு) தற்கால வழக் குகளில் சாட்சியாக வருகிறவர் களை குறுக்குவிசாரணை செய்ய லாமாகூடாதா என்பதற்கு விசா ரணை செய்யலாம் என்று 1863 உயர்நீதிமன்றத்தீர்ப்பு குறிப்பிடு கிறது. இதனைவேதநாயகம்பிள்ளை குறுக்குச் சவால் (Cross-Examination) என மொழிபெயர்த்து விளக்குகின்றார்.

Post - என்ற தலைப்பில் பக்கம் 27ல் கிழ்க்கண்ட மொழிபெயர்ப்பு படிக்கத்தக்கது.

தபாற்காகிதத்தை மோசமாய் மறைத்து விடுதல் அபகரித்துக் கொள்ளுதல் ஒரே குற்றம், அது வும் தபால் உத்தியோகஸ்தர் ஷெ குற்றம் செய்வது இரண்டு வருட கடுங்காவல் தண்டனைக் குரியவர் என்று உயர்-நீதிமன்றம் 1862 ல் தீர்ப்புக் கூறியுள்ளது.

திருவுளச்சீட்டு – என்ற மொழி பெயர்ப்பில் எந்த விஷயத்தைப் பற்றியாகிலும் திருவுளச்சீட்டுப் போட்டு அதில் விழுகிறபடி தீர்த்துக் கொள்ளுகிறதென்று யாராவது சங்கேதஞ் செய்து கொண்டால் 1844 ஷு 5 வது ஆக்ட்டில் சொல்லப்பட்ட பந்தய விளையாட்டிற்குச் சமானம் ஆகு மாட்டாது. அச்சிட்டு உறுதி யானது என்று தீர்ப்பு வழங்கப் பட்டது

'Judgement in Rem' என்ற தலைப்பில் சட்ட சூத்திரங்கள் மொழிபெயர்த்து 'பிந்தின சட்டத்தின் வாக்கியங்கள் முந் தின சட்டவிதிகளுக்கு விரோத மாயிருந்தால் முந்தின சட்டம் ரத்தானதாக எணணப்படுகிறது'- என்று (உ. நீ தீர்ப்பு R. 121. page) நீதி வழங்கப்பட்டது.

Street - தெருவீதி - என்ற தலைப்பில் 1861 ம் வருடம் உயர் நீதிமன்றம் தீர்ப்பு வழங்கியுள்ளது காணத்தக்கது. 'கும்பகோணம் சங்கராசாரியர் மடம் இருக்கிற வழியாக இஸ்லாமியர் மொஹரம் பண்டிகை கொண்டாடிப் போனதற்கு நஷ்டிகேட்டு ஷி மடத்தார் வியாச்சியம் செய்தார்கள். ஷி வீதி யாவர்க்கும் பொது என்றும், கலகத்துக்கு இடம் உண்டாகும் என்றால் மட்டும் அம்மார்க்கமாய்ப் போகக் கூடாது என்று 1860, 1861 ல் தீர்ப்பு வழங்கப்பட்டது.

தேவாலயம் என்ற தலைப்பில் வழங்கப்பட்ட உயர்நீதிமன்றத் தீர்ப்புகள் சில படித்துப் போற்ற வேண்டியவை.

1. மதுரை மீனாட்சி அம்மன் குருக்கள் பிரதிவாதிகளைப் போலவே தங்களுக்கும் ஆசாரிய அபிஷேக மரியாதை பாத்தியங் கிட்ட வேண்டும் என்று செய்த வியாச்சியம் செல்லாது. 1848ல் செய்யப்பட்ட விசேஷ அப்பீலின் படி கோயில் விஷயத்தில் தர்மகர்த்தர்கள் பூரண அதிகாரி. இவர்கள் இஷ்டானுசாரப் படியே நடத்தலாம். 1861ஸு 94 எண் விதிப்படி கோவிலில நடக்கிற மதாசார விஷயங்களில் கோர்ட்டாருக்கு அதிகாரம் இல்லை. (தீர்ப்பு 1861 P. 354. 1862P. 63)

2. காஞ்சிபுரம் தேவராஜ சுவாமி கோவிலுக்கு அஹோபில மடத்துக் குருவாகிய வாதிபோகும் போது தீவர்த்தி, மத்தாப்பு முதலிய பாண வேடிக்கை வேடிக்கைகளுடன் ஷி கோவிலின் தர்மகாத்தார்கள் வாதியை எதிர் கொண்டழைத்து, பரிவட்டங் கட்டி தீர்த்தம், சடகோபம் சாதித்து அபய ஹஸ்தமும் கொடுத்து ஹாரம், புஷ்பம், தேங்காய், பழம், இட்டலி, தோசை, வடை, அப்பம், தேன் குழல், தளிகை, பகாளபாத், அதிரஸம், ததியோதநம், சர்க்கரைப் பொங்கல் முதலான பிரசாதங்கள் வாதிக்கு ஷி தர்மகர்த்தர்களும் ஆராதனைக் காரர்களும் கொடுக்கிற வழக்கம் என்றும், அந்தப்படி 1860ம் வருஷத்தில் வாதிக்கு ஸம்மானம் செய்து உபசரியாது விட்டதால், அந்தப் பாத்தியதை ஸ்தாபிக்கவும், மாந நஷ்டமும் வருமான நஷ்டமும் கிட்ட வேண்டிய வாதி வியாச்சியம்செய்தார். ஷி கோவிலில் வாதிக்கு யாதொரு உத்தியோகமும் இல்லாததாலும், சிவில் விவகாரமாயிருந்தாலும், இது மதாசார சம்பந்தமாயிருப்பதாலும் வாதிக்கு வருமான நஷ்டம் உண்டாயிருந்தாலும் கூட அந்த விஷயத்தில் கோர்ட்டார் பிரவேசிக்கக் கூடாது என்று தள்ளுபடி செய்யப்பட்டது(1862ம் வருட தீர்ப்பு-பக்கம் -301)

3. மகமது சாஸ்திரம் : இறந்து போன மகமது மதிஸ்தனுக்கு ஒரு பெண் சாதியும் ஒரு சகோதரனும் இருந்தால் முகமது சாஸ்திரப்படி இறந்து போனவனுடைய சொத்தை 48 பாகமாக்கி அதில் 10 பாகம் அவனுடைய பத்நிக்கும் இதர பாகங்கள் அவனுடைய சகோதரனுச்கும் கிடைக்கும்.

இவை போன்ற பல விஷயங்கள் சித்தாந்த சங்கிரக நூலில் காணப்படுகின்றன. அக்காலத் தமிழ் நடையை அறிந்து கொள்வதற்குஇந்நூல் துணைபுரிவதோடு சட்ட நுணுக்கங்களைத் தமிழறிந்தவர்கள் மட்டும் அறிந்து கொள்வதற்கும் இந்நூல் வாய்ப்பாக உள்ளது.

தத்துவச் சிறுகதை

# குருநாதர்

'கண்ணபிரான்'

''எப்படிப்பட்ட மனிதரும் தவறுகள் செய்யாமல் இருக்க முடியாது. என் குருநாதரும் செய்திருக்கலாம். அறிந்தோ அறியாமலோ செய்திருக்கலாம் மகா காளியே! அவற்றையும் பொறுத்து உன் திருவடி நிழலில் அடைக்கலம் தர வேண்டுகிறேன்''

அவன் கண்களைத் திறந்து அவரைப் பார்கிறான். அவர் முகத்தில் அதே புன்னகை, சாந்தம். தூங்குவது போலவே தோற்றம்.

அவன் கீழே கிடந்த அவரின் கைகளை எடுத்து மார்பில் வைக்கிறான். போர்வையை கழுத்து வரையில் போர்த்தி விடுகிறான்.

எழுந்திருக்கிறான். மேற்கொண்டு காரியங்கள் பார்க்க வேண்டும். ஊர்ப் பெரியவர்களிடம் விஷயத்தைச் சொல்ல வேண்டும். அவரைச் சமாதியில் வைக்க வேண்டும்.

அவனுக்கும் அவருக்கும் பழக்கம் ஏற்பட்டது ஐந்து வருடத்திற்குள்தான். பொழுது போகாமல் ஒரு நாள் மாலையில் அந்த நந்த வனத்திற்குள் நுழைந்து கிணற்றடியில் அமர்ந்து மலர்களையெல்லாம் வேடிக்கைபார்த்துக்கொண்டிருந்த போது ''தம்பி'' என்னும் குரல் கேட்டுத் திரும்பினான்,

பின்னால் அவர் நின்று கொண்டிருந்தார். தாடிக்குள் புன்னகை

''யாரப்பா நீ''

அவன் சொன்னான். பேசிக் கொண்டார்கள். அடிக்கடி வர ஆரம்பித்தான். பழகினார்கள். ஒரு இதய பூர்வமான ஆத்மார்த்த மான நேசம் பிணைப்பு உண்டாயிற்று.

அவர் அவனுக்கு ஆச்சர்யமாகவும் புதிராகவும் இருந்தார். அவர் காளி உபாசகர். இரவு பத்து மணிக்கு மேல் விடியற் காலம் நான்கு ஐந்து மணி வரை அவர் காளி உபாசனையில் இருப்பார்.

ஒரு நாள் அவனையும் அருகில் உட்காரச் சொல்லி, கண்களை

மூடி காளியை நினைத்திருக்கும் படி சொன்னார். அவனும் அப்படியே செய்தான், சற்று நேரத்தில் அவனின் மணக்கண் முன்னே மகா காளியின் சொரூபம் வாயில் நீ கங்குகளுடன் பிரசன்ன மாகியது.

அவன் பயந்து போய்க் கண் களைத் திறந்து விட்டான்.

எதிரே அவர் அவனைக் கண்டு புன்னகை செய்து கொண்டிருந் தார்.

அதன் பின்பு பல நாட்கள் சென்று அவன் மறுபடியும் தனக்கு அப்படிப்பட்ட ஒரு காட்சி கிடைக்க வேண்டுமென்று அவரிடம் பல முறை கேட்டுக் கொண்டான். அவரோ மறுத்து விட்டார். அவனிடம் அதற்கு வேண்டிய மனப்பக்குவம் இல்லை என்றார்.

இன்னொரு நாள் அவனை அருகில் அமர்த்திக் கண்களை மூடு யிடுக்கும்படி செய்தார். மறுபடி அவன் கண் விழித்த போது அவன் தன் வீட்டுத் திண்ணையில் இருந்தான்.

அப்படி சில அற்புதங்களை அவன் அனுபவித்தான்.

''குருநாதரே எனக்குத் திரு மணம் வேண்டாம். அரசாங்க உத்தியோகம் வேண்டாம். சொத்து சுகங்கள் வேண்டாம். நான் தங்கள் தாசனாகிப் பணி விடை செய்யவே விரும்பு கிறேன்''

''தம்பி! நீ என்னைமாதிரி ஆக முடியாது. ஒவ்வொருவரும் இறைவன் வகுத்த பாதையில் தான் போகவேண்டும். எல்லோருமே இப்படித்தான் இருக்க வேண்டும் என்றால் புத்த மதம் உலகெங்கும் பரவியிருக்க வேண்டும். நீ உடனே திருமணம் செய்து கொண்டு மனைவி மக்களை நன்முறையில் நடத்திச் சீரிய வாழ்க்கை வாழ்.ஓய்வு கிடைத்த சமயம் நீ எனக்கும் உதவி செய் வதைப் பற்றி ஆட்சேபணை இல்லை.',

அவன் அப்படியே செய்தான். இதோ இன்று அவனை அழைத்து அருகில் அமரச் செய்து 'இன்னும் சற்று நேரத்தில் நான் எந்தச் சுனையிலிருந்து வந்தேனோ அங்கே யே போய்ச் சேரப் போகிறேன்' என்றார்.

அவர் மட்டும் போய்ச் சேர்ந்தார். உடல் இங்கேயே.

அவன் அவர் நினைவாக அந்தத் தனியிடத்தில் இருக்கையில் பளீர் என ஒரு நினைவு. உடலை விட்டுப் பிரிவதற்கு முன் அவர் ஒரு மூலை யைச் சுட்டிக் காட்டி "பின்பு அங் கே தோண்டிப் பார்'' என்றாரே.

அவன் உடனே எழுந்து கடப் பாரையை எடுத்து வந்து தோண் டினான், அந்த மூலையை.

கிடைத்தது ஒரு பானை. உடைத் தான். சிதறின பொன் ஆபரணங் கள். திகைத்தான்.

குருநாதரின் பொருள்களா? அவர் சேர்த்தவையா?

அவருக்கும் இந்தப் பொன்னின் மேல் பற்று?

எப்படி இவ்வளவு சேர்த்தார்?

மறுபடி அவற்றைப்பள்ளத்தில் போட்டு நிரப்பி மூடி விட்டுக் கதவை பூட்டிக் கொண்டு வீடு சேர்ந்தான்.

தூங்கும் போது அடி மனத்திலிருந்து பதில் கிடைத்து அவனுக்கு.

காலையில் கண் விழித்ததும் இந்தப் புதையல் அங்கே முன்பே, இருந்ததுதான்; அதை எடுத்தால் தமக்குப் பொன்னுசை வந்து விடுமோ என அஞ்சிப் பேசாமலே இருந்து தம் கூடு விட்டுப் போவதற்கு முன் தன்னிடம் சுட்டிக் காட்டினரோ'' என்று முடிவு செய்தான்.

"மனப் புதையலே, ஆத்மப் புதையலைத் தோண்டி எடுத்துப் பார்த்தவருக்கு இந்தப் புதையல் மிக அற்பமாகத் தோன்றியிருக்கும்'' என்று நினைத்துக் கொண்டான்.

அவன் பின்பு அவற்றைவிற்று அவரின் பெயரால் அறக் கட்டளை ஒன்று ஏற்படுத்தினுன்.

தானும் கொஞ்சம் எடுத்துக் கொண்டான்.

'பணம் சேர்ப்பதும் சம்சாரிகளுக்கு ஒரு கடமையாகும்' என்று அவரே சொல்லியிருந்தார்.

அவன் அவருக்காகக் கொஞ்சம் செலவு செய்திருந்தான்; ஆதலால் கொஞ்சம் எடுத்துக் கொள்வதில் தவறில்லை என்று நினைத்தான்.



# வழக்கு வென்றது

சொ. ச. செந்திலாண்டவன் எம். ஏ.,

## காட்சி 1

இடம்: புத்தூர்ச் சங்கவி சிவாச்சாரியார் இல்லத் திருமணப்பந்தர்

பாத்திரங்கள்: சடங்கவியார், அவர் நண்பர்கள், சிரோமணியார், சாஸ்திரிகள்.

நேரம்: இளங்காலைப் போது.

சடங்கவி: வாருங்கள், சிரோமணியாரே! திருமண ஏற்பாடுகள் சரியாகவே நடந்துள்ளனவா?

சிரோமணி: ஐயா! சடங்கவியாரே, தங்கள் எண்ணம் போல் சிறப்பாகத் திருமண ஏற்பாடுகள் செய்துள்ளீர்கள்! தங்கள் மகள் பெரும் பாக்கிய சாலி! இல்லாவிட்டால் இத்தகைய அரும்பெரும் தவப்புதல்வரான நம்பியாரூரர் அவளுக்கு மணமகனுக் கிடைப்பரா?

சாஸ்திரி: அதென்ன சிரோமணியாரே அப்படிச் சொல்லிவிட்டீர்? சடங்கவியார் திருமகளுக்கு என்ன குறைவு? 'பெண்களில் உயரநோற்றுள்' என்று கவி பாடலாமே ஐயா அவள் அழகிற்கு? இருப்பினும் சடங்கவியாரைத்தான் நாம் பாராட்ட வேண்டும். இருபெரும் அழகு ஓவியங்களை இணைக்கிறார் அல்லவா?

சடங்கவி: போதும்! போதும்! உங்கள் புகழுரைகள்! வாருங்கள் போய் மணமகனை எதிர்கொள்வோம்.

(போகிறார்கள்)

## காட்சி 2

(நம்பியாரூரர், தம் பரிவாரங்களோடு, பல்வகை மங்கலவாத்தியங்கள் முழங்க, மாதர்கள் பல்லாண்டு பாட, வேதியர்கள் நான்மறை ஓதிவர, தம் சுற்றத்தார்க் கெல்லாம் இன்பம் செய்து மாப்பிள்ளைக் கோலத்துடன் ஊர்வலமாய் வருகிறார்.)

(சடங்கவியார், சுற்றத்தாருடன் எதிர்கொண்டு)

சடங்கவி: வாருங்கள் நம்பியாரூரரே! வாருங்கள்! தங்கள் வருகையால் இந்த நகரமே இன்று புனிதம் பெற்று, விழாக் கோலம் கொண்டுள்ள தென்றால் தங்களின் பெருமையை என்னென்று சொல்வது? எல்லாம் என் பாக்கியம்.

நம்பியாரூரர்: (புன் முறுவலுடன்) சிவனருளே சிந்திக்கப் பெற்ற நீங்கள், மானிடனாகிய என்னை அவ்வளவு புகழ்தல் வேண்டாம் ஐயனே! எல்லாம் ஈசன் செயல்!

சடங்கவி: (தமக்குள்) (என்னே பணிவு! என்னே அடக்கம்! எல்லாவற்றையும் ஈசன் செயலாக்கும் இவர்தம் பண்புதான் என்னே! என்மகள் நிச்சயம் பாக்கியசாலிதான்) (தந் நிலைக்கு வந்து) ஆமாம் ... ஆமாம். எல்லாம் ஈசன் செயல்தான் ... அவனன்றி ஓர் அணுவும் அசையாதல்லவா?

நம்பி: ஆம் ... ஐயனே ... ஆம் ஆட்டுவிப்பவன் அவன்! ஆடுகின்றவர்கள் நாம் என்பதுதானே உண்மை!

சடங்கவி: உண்மைதான் ... உண்மைதான் ... என் செல்வ மகளின் திருக்கரம் பற்ற மணவினைப் பந்தர்க்கு வாருங்கள் ... நம்பியாரூரரே ...

நம்பி: அப்படியே ஆகட்டும்.

(மணபந்தலுக்குத் தம் பரிவாரம் சூழச்செல்கிறார்.)

## காட்சி 3

இடம்: திருமணப் பந்தர்:-

பாத்திரங்கள்: நம்பியாரூரர், அவர்தம் பரிவாரங்கள், திருமண வினை நிகழ்த்த இருக்கும் மறையவர்கள், மற்றும் பல்லோர்.

(திருமண நிகழ்ச்சி தொடங்குதற்கு இருக்கின்றது. அப்போது, முன்பு கயிலாயத்தில் ஆலாலசுந்தரிடம் கூறிய வாய்மொழிப்படி, நம்பியாரூரராகிய சுந்தரரைத் தடுத்தாட்கொள்ள, இறைவன் முதிய அந்தணராக, மொய்த்துவளர் பேரழகுடன் வைதீக உருவில் திரு மணப் பந்தர் முன் தோன்றுதல்)

முதிய அந்தணர்: மணத் தொழில் தொடங்கும் மறையவர்களே யான் சொல்லுவதைக் கேளுங்கள்! சபையோர் களே! யான் சொல்லுவதைக் கேளுங்கள்!

அவையோரும் நம்பியாரூரரும்: வேதியரே! வாருங்கள்! தங்கள் வரவு நல்வரவு ஆகுக! தாங்கள் இங்கு வந்திருப்பது நாங்கள் செய்த தவப்பேறு! தாங்கள் கூறவேண்டியதைக் கூறுங்கள்!

முதிய அந்தணர்: (நம்பியாரூரரை) நம்பியே! என்னிடையும் நின்னிடையும் உள்ள தொடர்பால், தொன்மை யிலிருந்தே வரும் ஒரு வழக்கினை முடித்துவிட்டு அப்பால் நீ செய்யத் தொடங்கும் வேள்வி யினைச் செய்யத் தொடங்கலாம் அப்பனே!

நம்பியாரூரர்: முதியவரே! தங்களை இதற்கு முன் நான் கண்டது மில்லை; பேசியதுமில்லை. இப்பொழுது இந்த இன்ப வேளையில் வந்து எனக்கும் உங்களுக்கும் வழக் கொன்று உள்ளதாகக் கூறுகிறீரே, அப்படியெப் படி இருக்க முடியும்? உங்கள் சொல்லை மதித்து அப்படி ஏதேனுமிருந்தால் அதை இக்கணமே முடித்து விட்டுதான் மறுகாரியம் பார்ப்பேன்! உங்கள் வழக் கினை எல்லோக்கும் புரியும் படியாகச் சொல்லுங்கள் வேதியரே!

முதிய அந்தணர்: சபையோர்களே! மறையோர்களே! நான் கூறப் போகும் வழக்கு இதுதான்! இதோ நிற்கிறானே நாவலூர் நம்பி, நம்பியாரூரன், இவன் என் வழி வழியடிமை! ஆகவே என் அனுமதியின்றித் திருமணம் செய்து கொள்ளும் இவனைத் தடுத்து நிறுத்தவே நான் வந்துள்ளேன்; தக்க விடையை எனக்குத் தாருங்கள்.

சடங்கவி: (நடுக்கத்துடன்) ஐயனே! தாங்கள் கூறுவது மெய்யா?

முதிய அந்தணர்: முக்காலும் உண்மை!

(சுற்றிலும் நிற்பவர்கள் கொல்லென்று சிரிக்கின்றனர்)

நம்பியாரூரர்: (வெகுண்டு) ஏதேது, முதியவராயிருந்தும், புதிய கல்லைத் தூக்கிப் போடுகிறாரே இவர்! நன்று நன்று இவர் கூற்று!

(இதைக் கேட்டதும் முதிய அந்தணர் நம்பியாரூரரை முறைத்து நோக்கி, தன் உத்தரியத்தை மேலே தோளில் வீசிப்போட்டு)

முந்திய அந்தணர்: நம்பியாரூரனே நகைக்க வேண்டாம்; அக்காலத்தில் உன் பாட்டனார் கொடுத்த அடிமை ஓலை இதோ வைத்துள்ளேன். உன் செயலை அறிந்தே. அதனையும் கொண்டு வந்துள்ளேன்! நீயோ சிறுபிள்ளைத் தனமாய் நகைத்து நிற்கிறாய்! இப்பொழுது என்ன கூறப்போகிறாய்?

நம்பி: (சிரிப்பு நீங்கி, ஏளனமாக) மறையவரே! உயர்ந்த குறிக்கோளுள்ளஅந்தணர்கள், குற்றமற்ற அந்தணர்கள் வேறோர் அந்தணர்க்கு அடிமையாதல் இவ்வுலகில் உண்டா? இவ்வுலகில் இல்லாத ஒன்றை நீர் பேசுவதைப் பார்த்தால் தங்களுக்குப் பித்தம் தலைக்கேறியிருக்க வேண்டும் என்று நினைக்கிறேன்.

(அவையோர் சிரிக்கின்றனர்)

(வளரும்)



# திருக்கணித பஞ்சாங்கம்

## தி. கி. நாராயணசாமி, கடலூர்.

ரௌத்திரி ௵ கார்த்திகை ௴ (1980 நவம்பர்—டிசம்பர்)

நாள், திதி, நட்சத்திரக் குறிப்பு *(மணிக்கணக்கில்)*

| தமிழ் ௳ | ஆங்கிலம் ௳ | கிழமை | திதி | நட்சத்திரம் | |
|---|---|---|---|---|---|
| 1 | (16—11—80) | ஞாயிறு | அஷ்டமி 8-43 | அவிட்டம் | 9-17 |
| | | | | முடவன் முழுக்கு | |
| 2 | (17—11—80) | திங்கள் | நவமி 7-06 பின் தசமி 28-52 | சதயம் | 8-20 |
| 3 | (18—11—80) | செவ்வாய் | ஏகாதசி 26-05 | பூரட்டாதி 6-45 பின் உத்திரட்டாதி | 28-39 |
| 4 | (19—11--80) | புதன் | துவாதசி 22–51 | ரேவதி | 26-07 |
| 5 | (20—11—80) | வியாழன் | திரயோதசி 19-21 | அசுவனி | 23-20 |
| 6 | (21—11—80) | வெள்ளி | சதுர்த்தசி 15-43 | பரணி | 20–27 |
| | | | | பரணி திருஅண்ணாமலை தீபம் | |
| 7 | (22—11—80) | சனி | O பௌர்ணமி 12-09 | * கார்த்திகை | 17–41 தீபம் |
| 8 | (23—11—80) | ஞாயிறு | பிரதமை 8–30 பின் துவிதியை 29-57 | ரோகணி | 15-13 |
| 9 | (24—11—80) | திங்கள் | திரிதியை 27-41 | மிருகசிரிஷம் | 13-14 |
| 10 | (25—11—80) | செவ்வாய் | சதுர்த்தி 26-09 | திருஆதிரை | 11-54 |
| 11 | (26—11—80) | புதன் | பஞ்சமி 25-28 | புனர்ப்பூசம் | 11–21 |
| 12 | (27--11—80) | வியாழன் | சஷ்டி 25–40 | பூசம் | 11-38 |
| 13 | (28--11—80) | வெள்ளி | சப்தமி 26-41 | ஆயில்யம் | 12–46 |
| 14 | (29—11—80) | சனி | அஷ்டமி 28-25 | மகம் | 14-38 |
| 15 | (30—11—80) | ஞாயிறு | நவமி நாள் முழுவதும் | பூரம் | 17-06 |
| 16 | ( 1—12—80) | திங்கள் | நவமி 6-40 | உத்திரம் | 19-58 |
| 17 | ( 2—12—80) | செவ்வாய் | தசமி 9-13 | அஸ்தம் | 23-00 |
| 18 | ( 3—12—80) | புதன் | ஏகாதசி 11–50 | சித்திரை | 26-01 |
| 19 | ( 4—12- 80) | வியாழன் | துவாதசி 14-21 | சுவாதி | 28-50 |
| 20 | ( 5—12—80) | வெள்ளி | திரயோதசி 16-36 | விசாகம் நாள் முழுதும் | |
| 21 | ( 6—12--80) | சனி | சதுர்த்தசி 18-32 | விசாகம் | 7-22 |
| 22 | ( 7—12—80) | ஞாயிறு | ● அமாவாசை 20-05 | அனுஷம் | 9-34 |
| 23 | ( 8—12—80) | திங்கள் | பிரதமை 21-15 | கேட்டை | 11-24 |
| 24 | ( 9—12—80) | செவ்வாய் | துவிதியை 22–03 | மூலம் | 12–52 |
| 25 | (10—12—80) | புதன் | திரிதியை 22-28 | பூராடம் | 13-59 |
| 26 | (11—12—80) | வியாழன் | சதுர்த்தி 22-30 | உத்திராடம் | 14-43 |
| 27 | (12—12—80) | வெள்ளி | பஞ்சமி 22-07 | திருஓணம் | 15-04 |
| 28 | (13—12—28) | சனி | சஷ்டி 21-19 | அவிட்டம் | 15-00 |
| 29 | (14—12—80) | ஞாயிறு | சப்தமி 20-04 | சதயம் | 14-31 |
| 30 | (15—12 –80) | திங்கள் | அஷ்டமி 18–25 | பூரட்டாதி | 13-25 |
| | | | சூரியன் தனுர் ராசிக்கு வரவு | | 15-13 |

உரை நடை

அமைச்சர்கள் சித்தமூர்த்தியினை வணங்கிப் புறப்பட்டுச் சென்று மன்னவனை அடைந்து சித்தமூர்த்திகள் மறுத்துக் கூறியதை மொழிந்தனர்.

பாண்டியன் சித்தமூர்த்தியின் பெருமையினைப் பேசுதல்

அதுகேட்ட பாண்டியன் அமைச்சர்களை நோக்கி, ''இறைவன் திருவருளைப்பெற்று, இம்மை, மறுமைப் பயன்களை வெறுத்த யோகிகள், [1]இந்திரன் பிரமன் திருமால் முதலியவர்களையும் மதியாரே! இப்பூமியை ஆளும் மன்னரையா மதிப்பார்!'' என்று சொல்லிக் கொண்டு வாளா இருந்தான்.

செய்யுள்— 24
ஆகச்செய்யுள்— 1356

## 21. கல்லானைக்குக் கரும்பருத்திய படலம்

அபிடேக பாண்டியன் சித்தமூர்த்தியினைக் காண எண்ணுதல்

பின்பு அபிடேக பாண்டியன், தன் மனத்திலே அன்பும் அச்சமும் பெருக, ''யான் பெரியோரை நன்கு மதியாது ஏளியாரைப்போலக் கருதி அவமதித்து இங்கு வரும்படி சொல்வித்தேன்; என் அறியாமை இருந்தவாறு என்னே! என்னை நாடி வரத்தக்க குறைபாடு அவர்க்கு யாதுளது? ஆதலின் அச் சித்தமூர்த்திகளை யானே தேடிச்சென்று காணத்தக்கவனாவேன்'' என்று எண்ணினான். பாண்டியனது உள்ளக் குறிப்பினை அறிந்த மௌன நிலையினைப் பூண்ட சிவயோகியாகிய சித்தமூர்த்திகளும் முன்னதாகவே தமது இந்திர விமானத்திற்கு வடமேற்குத் திசையின்கண் எழுந்தருளியிருந்தார்.

அபிடேக பாண்டியனும் சித்தமூர்த்திகளும்

அன்று தை மாதம் தோன்றும் முதல்நாள் (தைச் சங்கராந்தி புண்ணிய காலம்) ஆதலின், பாண்டியன் திருக்கோயிலுக்குச் சென்று மதுரை நாயகனாகிய சோமசுந்தரக் கடவுளை வணங்கித் துதித்து அன்புடன் உள்ளே வலமாக வரும்போது அவனுக்கு முன்னர் வருகின்ற காஞ்சுகி மாக்கள் (சட்டையிட்ட மெய்க்காப்பாளர்) புலித்தோல் ஆசனத்தில் ஐம்புலன்களையும் வென்ற திருவேடந்தாங்கி

1. இங்கு, ''சென்று நாம் சிறு தெய்வஞ் சேர்வோ மல்லோம்'' என வரும் திருநாவுக்கரசர் தேவார அடி கருதற்பாலது.

யோக பட்டிகை அணிந்து, மழுப்படையின்மேல் திருக்கரத்தினை வைத்துக்கொண்டு இறுமாப்புடன் வீற்றிருக்கும் சித்தமூர்த்தியை நோக்கி, அவர் சமீபத்தில் வந்து பிரம்பினை நீட்டி, ''இவ்விடத்தை எழுந்து போகக்கடவீர்'' என்றனர்.

பின்னுக வரும் தென்னர் பெருமான் அச் சித்தமூர்த்தியை நோக்கி, ''நுமது நாடும் ஊரும் எவை? உமக்கு யாது வடும்? யாது வேண்டும்? உமது பெயர் என்ன? சொல்வீராக'' என்று வினவினுன். அதற்குச் சித்தமூர்த்திகள், ''அப்பா! நாம் எந்த நாட்டிலும் எந்த நகரினும் திரிவோம்; ஆயினும், இப்பொழுது நாம் இருக்கும் தலம் காசுமீர நாட்டின்கண் உள்ள காசி மாநகரம் ஆகும். ஒரு பற்றும் இல்லாதவராய்ப் பிச்சை எடுத்தலாகிய பெருவாழ்வினையுடைய அடியார்களே நம் உறவினர் ஆவர்; எந்நாளும் வித்தை செய்து கொண்டு திரிகின்ற சித்தர் யாம்; தில்லைவனம் முதல் இங்குள்ள சிவத்தலங்கள் பலவற்றையும் வணங்க வந்தோம்; ஞானத்தைப் பாலிக்கும் இந்த மதுரை மாநகர் இம்மையிலே சிவன் முத்தியையும் மறுமையிலே பரமுத்தியையும் அளிக்கும்; இங்குள்ளவர்களுக்கு எமது திருவிளையாடல்களைக் காட்டி, அவர்கள் விரும்பும் பல சித்திகளையும் அருளுவோம்; வேதம் முதலிய அறுபத்துநான்கு கலை ஞானங்களிலும் வன்மையுடையோம்; அன்றியும், சேய்மையிலுள்ள பொருளனைத்தையும் அண்மையில் வரச்செய்தலில் வல்ல சித்தர் யாம். பாண்டியனே! உன்னிடத்தே நாம் பெறத்தக்கது ஒன்றுமில்லை'' என்று கூறிப் புன்னகை புரிந்தருளினுர்.

### கல்லானைக்குக் கரும்பு அளித்தல்

சித்தமூர்த்திகள் மொழிந்தவற்றைக் கேட்ட பாண்டியன், ''இவருடைய இறுமாப்பும் செருக்கும் பெருமிதமுமாகிய இவற்றை யாதினுல் அளந்து அறிவேன்!'' என்று எண்ணி அதற்கு வேண்டும் திறத்தை ஆராய்வானுயினுன். அப்பொழுது ஒரு வேளாளன் காண்போர் யாரும் கமுகோ என்று ஐயுறும் வண்ணம் செழித்தோங்கிய ஒரு கரும்பினைக் கையிற்கொண்டு வந்து வணங்க, அரசன் அக் கரும்பினைக் கையில் வாங்கிக் கொண்டு சித்தமூர்த்திகளை நோக்கி, ''வல்லவர்களில் வல்லவரென உம்மை மதித்துக் கொண்டவரே ! நீர் இங்கு நிற்கும் இந்தக் கல்லானைக்கு இக் கரும்பினை உண்பித்தால் எல்லாம் வல்ல சித்தரும் நீரே; மதுரையில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளும் நீரே அன்றி வேறு யாவர்? மேலும், நுமது மனம் விரும்பியதை அளிப்பேன்'' என்று கூறினுன்.

''வல்லாரில் வல்லேம் எனவும்மை மதித்த நீர்இக்
கல்லானைக்(கு) இந்தக் கரும்பை அருத்தின் எல்லாம்
வல்லாடும் நீரே;மதுரைப்பெரு மானும் நீரே;
அல்லால் எவர்? நும் மனம்வேட்ட தளிப்பன்'' என்றான்.

பாண்டியன் மொழிந்ததைக் கேட்ட சித்தமூர்த்திகள் புன்னகை புரிந்து, ''பாண்டியனே! வா. எமக்கு உன்னால் வடும் பயன் யாது உளது? உன்னுடைய ஆசை தீரும் வண்ணம் நாமே உனக்கு வேண்டுவனவற்றைத் தருகின்றதல்லாமல் வேறுஉண்டோ? ஏதேனும் ஒரு வித்தையைக் கற்றவர் செல்லுதற்கரிய உலகத்திலும் சென்று பல்லோரும் நன்கு மதிக்க அவ்வித்தையைக் காட்டிப் பயன் அடைவர். ஆனால் எல்லா விஞ்சைகளையும் அறிந்த நமக்கு ஒன்றிலும் ஆசை யில்லை. இந்தக் கல்லானை இதோ கரும்பினைக் கடிக்கின்றதைப் பார்'' என்று கூறினர்.

''செல்லா வுலகத் தினுஞ்சென்றொரு விஞ்சை கற்றோர்
பல்லாரும் நன்கு மதிக்கப்பயன் எய்து வார்கள்;
எல்லா மறிந்த எமக்(கு) ஒன்றிலும் ஆசையில்லை;
கல்லானை கன்னல் கறிக்கின்றது காண்டி'' என்றார்.

### கல்லானை கரும்பு தின்னுதல்

பின்பு அந்தக் கல்லானையின்மீது சித்தமூர்த்திகள் சிறிது கடைக்கண் சாத்தியருளினர்[1]. என்னே! ஆச்சரியம்! உடனே அக்கல்யானை கண்ணைத் திறந்தது; மும்மதங்களும் ஒழுகவாய் திறந்து மேகத்தின் வாய் அடைக்குமாறு பிளிறியது; துதிக்கையினை நீட்டிப் பாண்டியன் கையிலுள்ள கரும்பைப் பிடுங்கிக் கடைவாயால் சாறு ஒழுகும் வண்ணம் கடித்து மென்று தின்றது; துதிக்கை ஊஞ்சல்போல் ஆடத் தருக்குற்று நிழலைச் சிறி நிமிர்ந்து நின்றது.

### கல்லானை அரசனின் கண்டமாலையைப் பறித்து விழுங்குதல்

பின்னர், சித்தமூர்த்திகள் கல் யானையை மீண்டும் சிறிது கடைக்கண் சாத்தியருளினர். உடனே கல்யானை பாண்டியன் கழுத்திலுள்ள முத்தாலாகிய கண்டமாலையை எட்டிப் பிடுங்கியது. அதனைக்கண்ட மெய்க்காவலர் சீற்றங்கொண்டு யானையை அடித்தற்கு நெருங்கிக் கோலினைக்கொண்டு ஓங்கச் சித்தமூர்த்திகள் கண் சிவந்து யானையைக்

---

1. இங்கு, ''நதிமதந் தறுகண் புகர்கொலை மறுத்த, கல்லிப மதனைக் கரும்புகொள வைத்த, ஆலவாய் அமர்ந்த நீலநிறை கண்டன்'' என வரும் கல்லாட அடிகள் சிந்திக்கற்பாலன.

கோபித்துப் பார்த்தார். உடனே கல்யானை முத்துமாலையை உண்டு விட்டது. பாண்டியன் கண் சிவந்து சிவயோக சித்தமூர்த்தியின்மேல் கோபங்கொண்டான். அதனைக்கண்டு அரசனின் மெய்க்காப்பாளருட் சிலர் கோபித்துச் சித்தமூர்த்தியை அடிக்க வந்தனர். அப்போது அச் சித்தமூர்த்திகள் புன்னகை புரிந்து, தம் மீது வெகுண்டு வந்தோரைக் கையமர்த்தி, 'நில்லுங்கள்' என்று கூறினார். உடனே அவ்வீரர்கள் வைத்த அடியைப் பெயர்க்க முடியாமல் நடுங்கி ஓவியம்போல் நின்றார்கள்.

பாண்டியன் வேண்டுகோள்

பாண்டியன் அதுகண்டு கோபமாறி அன்பும் அற்புதமும் பொங்கி வழியச் சித்தமூர்த்திகளின் திருவடிகளில் தன் முடிபடும் வண்ணம் விழ்ந்து வணங்கி, ''பாசத்தாற் கட்டுண்ட எளியேன் செய்த பிழையைப் பொறுத்தருளும்'' என்று விண்ணப்பஞ் செய்தான். அன்புக்கு இரங்கும் பரங்கருணைத் தடங்கடலாகிய சித்தமூர்த்திகள் மகிழ்ந்து, ''வேண்டும் வரத்தினைக் கேள்'' என்று பணித்தருளினார். உடனே அபிடேக பாண்டியன் வணங்கி, 'நற்புத்திரப்பேறு அருள்க' என்று வேண்டினான். சித்தமூர்த்திகள் அங்ஙனமே அருள்புரிந்து தமது திருக்கரத்தை யானையின்மேல் வைத்து அருள் நோக்கம் புரிந்தருளினார். உடனே கல்யானை தனது துதிக்கையினை நீட்டி முத்துமாலையைப் பாண்டியனிடம் கொடுத்தது. பாண்டியன் கையினை நீட்டி அதனை வாங்கினான். வாங்குமுன் எதிரே நின்றருளிய சித்தமூர்த்திகளின் திருவுருவத்தைக் காணானாயினன். யானையின் உருவமும் அங்கு நின்ற மற்றைய கல்லானைகளைப் போல ஆயிற்று.

பாண்டியன் சோமசுந்தரக் கடவுளைத் துதித்தல்

இவற்றைக் கண்ட பாண்டியன் அஞ்சி, ''இத் திருவிளையாடல் எம் உயிர்க்கு உயிராக விளங்கும் சோமசுந்தரக் கடவுளின் அருள் விளையாடலே'' என்று தெளிந்து வேதநாயகனாகிய சோமசுந்தரக் கடவுளை மீண்டும் வந்து வணங்கி, ''முற்றும் உணர்ந்த முதல்வனே! அறிவில்லாதவனாகிய நான், அறியாமையால் உமது திருவிளையாடலை அளந்தறியத் தொடங்கினேன்'' என்று அழுது வணங்கி [1]அபராதங் கொடுத்துக் கைகூப்பி நின்று துதிப்பானாயினன்.

''வேதியாய் வேத விளைபொருளாய் வேதத்தின்
நீதியாய் நீதி நெறிகடந்த நீளொளியாய்
ஆதியாய் ஈறாய் நடுவாய் அவைகழிந்த
சோதியாய் நின்றாய்! என் சோதனைத்தோ? நின்னியல்பே''

1. அபராதம் – குற்றம் புரிந்ததற்குக் கழுவாகச் சமர்ப்பிக்கும் காணிக்கை.

"நின்னால் மொழிந்தமறை நின்னடிகள் வந்தித்தும்
பன்னாள் அருச்சித்தும் பாதந் தலைசுமந்தும்
உன்னுமம் வாசித்தும் உன்னையறி யேன்என்று
சொன்னால் அடியனேன் சோதனைத்தோ! நின்னியல்பே"

"பெரியதினும் பெரியதுமாய்ச் சிறியதினும் சிறியதுமாய்
அரியதினும் அரியதுமாய் எளியதினும் எளியதுமாய்க்
கரியதுமாய்க் காண்பானுங் காட்சியுமாய் அவைகடந்த
துரியமுமாய் நின்றாய்! என் சோதனைத்தோ? நின்னியல்பே"

என்று பலமுறை துதித்துத் தனது அரண்மனையை அடைந்து வீற்றிருந்தான்.

**அபிடேக பாண்டியன் இறைவன் திருவடியினை அடைதல்**

பின்பு அபிடேக பாண்டியன் சித்தமூர்த்தியின் திருவருளால் விக்கிரமன் என்னும் புதல்வனைப் பெற்றுப் பலகாலம் செங்கோல் நடாத்தி விக்கிரமனுக்கு முடிசூட்டி அரசினை அளித்துவிட்டுப் பாசத்தினை வென்று சித்தமூர்த்தியின் திருவருட் பார்வையால் விளைந்த பேரின்பத்தின்கண், தேனின்கண் வீழ்ந்த வண்டினைப் போல இரண்டறக் கலந்திருந்தான்.

செய்யுள் — 29
ஆகச் செய்யுள் — 1385

## 22. யானை எய்த படலம்

**விக்கிரம பாண்டியன் ஆட்சி புரிதல்**

பிறரால் வெல்லுதற்கரிய செங்கோலையுடைய விக்கிரமபாண்டியன் எட்டுத் திக்குகளிலும் புவி முழுதிலும் உள்ள அரசர்களாலே திறையாகத் தரப்படும் செல்வம் நிறைவு எய்த, கொடிய வறுமை தீமை முதலாய பகைஓடச் செங்கோலோச்சிக் குடிகளின் துன்பத்தைப் போக்கி முறை செய்வானாயினன்; அப்பொழுது புத்தம், சமணம் முதலிய புறச் சமயங்களாகிய களைகளைக் களைந்து எறிந்து, வேத நெறியாலும் சிவாகம நெறியாலும் உணர்த்தப்படும் சைவமாகிய பயிரினைச் செழித்து வளரச் செய்தான்; விதி மார்க்கத்தினும் பத்தி மார்க்கத்தினும் யாவரும் வழுவாது ஒழுகி அவற்றின் பயன்களை நுகர அரசுபுரிந்து வந்தான்; விண்ணினின்றும் இழிந்த விமானத்தின் அருகில் வடபால் திருக்கோயில் ஒன்று எடுப்பித்தான்; அதனில் உருவமும் அருவமும் அற்று அருளுருக்கொண்டு வந்த சித்த மூர்த்திகளின் திருவுருவத்தை அமைத்து, அதற்குத் தொண்டு செய்து வந்தான்.

சோழ மன்னனின் சூழ்ச்சி

இவ்வாறு விக்கிரம பாண்டியன் ஒழுகு நாளிலே, சூரியன் மரபில் வந்த சோழமன்னன் ஒருவன் காஞ்சி நகரத்தில் இருப்பாறுயினன். அவன் சமண மதமாகிய புறநெறியில் நின்று, சந்திரன் மரபில் வந்த பாண்டியனேடு பகைமை பூண்டிருந்தான்; சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளை எந்நாளும் மனத்திற் கொண்ட விக்கிரம பாண்டியனை நேரில் வந்து எதிர்த்துப் போரிட ஆற்ருது ஒடி சூழ்ச்சியினுல் கொல்லக் கருதினுன்; அப்போது அஞ்சனம், கிரவுஞ்சம், கோவர்த்தனம், அத்திவெற்பு, சையம், ஏமகூடம், விந்தம் என்னும்[1] எட்டு மலைகளிலும் வாழும் சமண குரவர்கள் எண்ணுயிரவர்க்கும் தனித்தனியே ஓலை எழுதி அனுப்பினுன். தம் வடிவு போலவே உள்ளம் முழுதும் கறுத்து நின்ற சமண குரவர்கள் எண்ணுயிரவரும் சோழ மன்னன் அனுப்பிய ஓலையைப் பிரித்துப் படித்தனர்; மேகக் கூட்டங்களைப் போல் மலைகளினின்றும் இறங்கிக் காஞ்சி நகரை நோக்கிப் புறப்பட்டனர்; அனைவரும் இருட் கூட்டம்போல் ஒன்று சேர்ந்து காஞ்சி மாநகரை வந்து சூழ்ந்தனர்; பின்பு சோழனுடைய அரண்மனையின் தலைவாயிலை அடைந்து, அரசனுடைய ஏவலாளர் விடுக்க உள்ளே சென்று அரசன் இருப்பிடத்தை அடைந்தனர்; அப்போது சோழனுடைய முடியின்மேல் மயிற்றேகையை வைத்து ஆசி மொழி கூறினர், சோழ மன்னன் அச் சமண குரவர்களைப் பார்த்து, "வசியம் முதலாகிய ஆறு தொழில்களிலும் வன்மை மிகுந்தவர்களே! நீங்கள் அபிசார வேள்வி செய்து விக்கிரம பாண்டியனைக் கொல்வீரேல் எனது நாட்டில் உங்களுக்குப் பாதி தருவேன்; சென்று அதனைச் செய்யுங்கள்" என்ருன்.

---

1. இவை பலவாறு வழங்கும்; அவற்றைச் சமணர்கள் வேறு விதமாக வழங்குவதை, (பரங்குன்(று) ஒருவகம் பப்பாரம் பள்ளி, அருங்குன்றம் பேராந்தை யானை-இருங்குன்றம், என்றெட்டு வெற்பும் எடுத்தியம்ப வல்லார்க்குச், சென்றெட்டு மோபிறவித் திங்கு" என வரும் ஒரு பழைய வெண்பாவால் அறியலாம். அன்றியும், சமணர்களுடைய எட்டு மலைகளை மதுரையைச் சுற்றியுள்ள யானைமலை, பன்றிமலை, நாகமலை, பசுமலை, இடபமலை, இலத்திமலை, பிரான்மலை முதலிய எண் பெருங்குன்றங்கள் எனவும் கூறுகின்றனர். "ஆனை மாமலையாதியாய விடங்களில் பல வல்லல்சேர் ஈனர்கள்" என்பது திருஞானசம்பந்தர் தேவாரம்.

### அபிசார வேள்வி

தவத்தில் மறைந்து தீச்செய்கையே செய்தொழுகும் எண்ணுயிரம் சமண குரவர்களும் சோழனின் விருப்பத்திற்கு உடன்பட்டுச்சென்று; பாலியாற்றங்கரையிலே மூன்று காதமளவினதாகிய பரந்த யாகசாலை ஒன்றை அமைப்பித்தனர்; அதில் ஒரு யோசனை அகலந் தோண்டி எட்டுக் கோணமுடைய ஒரு ஓமகுண்டத்தினைச் செய்து, நஞ்சு பொதிந்த எட்டி முதலிய விறகுகளையிட்டு வேம்பின் நெய்கலந்த நச்சுப் பிராணிகளின் கொழுவிய ஊனையும், மிளகுப் பொடி கலந்த எண்ணெயையும் நிறையப் பெய்து அபிசார வேள்வியைச் செய்தார்கள் கொல்லாமையயாகிய விரதம் பூண்ட அச்சமண குரவர்கள் செய்த கொடிய வேள்வித் தீயினுல் அருகிலுள்ள நந்தவனம், சோலைகள், காடுகள் முதலானவை கருகித் தீய்ந்தன; ஓடைகள் வாவிகள், குளங்கள் எல்லாம் நீர் வற்றின; மேகமும் தீய்ந்து கருகியது.

### வேள்வியினின்று கொல்களிறு தோன்றுதல்

அப்பொழுது கடலின்கண் எழுந்த நஞ்சினைப்போல வெகுண்டு அவ்வேள்விக் குண்டத்தினின்றும் காற்றினை எழுப்புகின்ற காதினையும் தொங்குகின்ற வாயினைப்பற்றிய கொம்பினையும், ஊஞ்சல்போல் ஆடும் துதிக்கையினையும், ஆருகச் சுரந்து ஒழுகுகின்ற மதத்தினையுமுடைய ஒரு பெரிய யானையானது எழுந்தது. அது நீல மலை எழுந்த தோற்றம் போலவும், இயமன் எழுந்த தோற்றம் போலவும் காட்சியளித்தது.

### சமணர்கள் யானையை மதுரைமீது ஏவுதல்

அஞ்சாமையினையுடைய அந்த யானையினைச் சமண குரவர்கள் நோக்கி, "நீ விரைந்து சென்று விக்கிரம பாண்டியனை மதுரைப் பதியோடு அழித்துவிடக் கடவாய்" என்று கூறித் தென் திசைக் கண் முற்படச் செல்லுமாறு ஏவி விடுத்தனர். அப்பொழுது நிலவுலகம் பிளக்கும் வண்ணம் இடிபோல் பிளிறிக் கொணடு யானை புறப்பட்டுச் சென்றது. அருள் சிறிதும் இல்லாதவர்களாகிய சமய குரவர்களும் அறிவு, நன்னெறி, இம்மை மறுமைப்பயன், வீடுபேறு இவற்றைச் சிறிதும் பெருத சோழனுடைய சேனைகளோடு ஒன்றுசேர்ந்து அவ்வியானையின் புறத்தே சூழ்ந்து சென்ருர்கள்.

### யானை மதுரையை அழிக்கச் செல்லும் காட்சி

பாதலத்தைத் தொடும் கால்களையும், வானத்தை முட்டும் தலையையுங்கொண்ட அந்த யானை, இடியொலிபோல் பிளிறியது;

ஊழிக்காலத்தில் வீசும் காற்றுப்போல் எழக் காதுகளை வீசியது; ஏழு கடல்போல் மதநீரைப் பொழிந்தது; கண்களினின்றும் வடவா முகாக்கினிபோலத் தீயினைச் சிந்தியது; கூற்றுவனும் திக்குயானைகளும் கண்டு கண் புதைந்து அஞ்சி நடுநடுங்கச்சென்றது. செல்லும் வேகத்தில் அவ்வியானையானது மேகத்தின் வயிற்றைக்கிழித்து இடியினை உதிர்க்கும்; திசைகள் செவிடுபடப் பிளிறும்; துதிகையினை வீசிப் பெரிய குன்றுகளை சுற்றிப்பிடிக்கும்; பின்பு, அக்குன்றுகளைக் கடலினைக் கலக்குகின்ற பெரிய மத்தாகிய மந்தர மலையைப்போலச் சுழற்று நிற்கும்: வடவைத் தீ நடந்து வருவதுபோல நிலவுலகில் நடந்து சென்றது.

வழுதி வானொலி கேட்டுஅட்டாலை மண்டபம் அமைத்தல்

ஒரு கொடிய கூற்றுவன் போல மதுரையை நோக்கி வருகின்ற யானையினைக் கண்டவர்கள் விரைந்து ஓடிப்போய் விக்கிரம பாண்டியனுக்குக் கூறினர். அதனைக்கேட்ட பாண்டியன் சுழிபட்டு அலைகின்ற நீர்போல மனம் சுழன்று வருந்தினன்! உடனே யானைகளால் சுமக்கப்பெற்ற இந்திர விமானத்தில் எழுந்தருளியிருக்கும் யானையை உரித்தருளிய சோம சுந்தரக் கடவுளின் திருமுன் சென்று, பன்முறை மனமுற வணங்கிநின்று, "எம்பெருமானே! இந்த யானையைக் கொன்று அடியேனைக் காத்தருளவேண்டும்" என்று குறையிரந்தான். அப்பொழுது விண்ணிலிருந்து, "பாண்டியனே! யானையை ஏவியவர் களின் மனவன்மை கைவிடுமாறு நாம் ஒரு வில் ஏந்திய சேவகனாய் வந்து அக் கொடிய யானையின் உயிரைக் கவடுவோம்; அதற்கு முன்னே இந்நகரின் அருகில் கீழ்திசையில் ஒரு [1] அட்டாலை மண்டபம் செய்விக்கக் கடவாய்" என்ற ஒரு திருவாக்கு எழுந்தது. பாண்டியன் அது கேட்டு மன மகிழ்ந்து வணங்கி விரைந்து சென்று பொன் மலையே உருமாறி வந்தது போலப் பதினாறு தூண்கள் அமைத்து ஒரு அட்டாலை மண்டபத்தைச் செய்வித்தான்.

---

1. அட்டாலை- விலங்குகளை வேட்டையாடுபவா ஏறியிருக்கும் பரண். அட்டாலை மண்டபம் - பரண் வடிவாகச் செய்த மண்டபம். இம்மண்டபம் பண்டையக்காலத்தில் கீழை மதிலைச்சார இருந்த தென்று தெரிகிறது, தற்போது மண்டியூர்த் தெப்பக்குளத்தில் வாயு மூலையில் பதினாறு கால்களால் ஆகியதோர் மண்டபமாக இருக்கின் றது. இதற்கு வடக்கே யானை மலை உள்ளது,

சிவ சிவ

# ‘ஸ்ரீ குமர குருபரர்’

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர்

## ஸ்ரீலஸ்ரீ காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அவர்களின் அருளாணையின் வண்ணம் வெளிவரும்

## சமய இலக்கியத் திங்கள் இதழ்

### சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| ஆயுட் சந்தா | ( உள்நாடு ) | ரூ. | 100—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 125—00 |
| ஆண்டுச் சந்தா | ( உள்நாடு ) | ரூ. | 7—50 |
| ,, | (ஸ்ரீலங்கா ) | ரூ. | 10—00 |
| ,, | (வெளிநாடு) | ரூ. | 12—00 |

### விளம்பரக் கட்டண விகிதங்கள்

| | | |
|---|---|---|
| அட்டை பின்பக்கம் 2 வண்ணங்கள் | ரூ. | 150—00 |
| முன் அட்டை உள்பக்கம் | ரூ. | 125—00 |
| பின் அட்டை உள்பக்கம் | ரூ. | 100—00 |
| உள் முழுப்பக்கம் | ரூ. | 60—00 |
| உள் அரைப்பக்கம் | ரூ. | 30—00 |

முகவரி :- நிர்வாக ஆசிரியர், ‘ஸ்ரீ குமரகுருபரர்’
ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள் அ. கு. எ. 612 504
(தஞ்சை மாவட்டம்)

---

| | | | |
|---|---|---|---|
| திருவருட்பயன் | (விளக்க உரையுடன்) | விலை ரூ. | 1—50 |
| நீதிநெறி விளக்கம் | ,, | விலை ரூ. | 1—50 |
| உண்மைநெறி விளக்கம் | ,, | விலை ரூ. | 0—75 |
| கந்தர்கலி வெண்பா | ,, | விலை ரூ. | 1—50 |
| உண்மை விளக்கம் | ,, | விலை ரூ. | 1—00 |
| திருவுந்தியார் | ,, | விலை ரூ. | 1—25 |
| கொடிக்கவியும் வினவெண்பாவும் | ,, | விலை ரூ. | 0—75 |
| திருக்களிற்றுப்படியார் | ,, | விலை ரூ. | 1—25 |
| திருக்குறள் ஒரு பொதுமறை | | விலை ரூ. | 3—00 |
| மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ் – கருத்தரங்கக் கட்டுரைகள் | | விலை ரூ. | 3—00 |
| திருவாசகம்-ஆங்கில மொழிபெயர்ப்பு ( கோ. வன்மீகநாதன் ) | | விலை ரூ. | 15—00 |
| தொல்காப்பியம் – நன்னூல் – எழுத்ததிகாரம் (வித்துவான் க. வெள்ளைவாரணனார்.) | | விலை ரூ. | 10—00 |
| திருவருட்பயன் – நிரம்ப அழகிய தேசிகர் உரையும், திரு. க. வெள்ளைவாரணனார் எழுதிய உரை விளக்கமும் | | விலை ரூ. | 5—00 |

50 ரூபாய்கட்கும் அதற்குமேலும்
வாங்குவோருக்கு 20% கழிவு உண்டு.

தபாற்கட்டணம் தனி. 1000 ரூபாய்க்கு மேற்பட்ட ஆர்டர்களுக்கு அனுப்புகைச் செலவு இலவசம். நூல்கள் கிடைக்குமிடம்:–

நிர்வாக ஆசிரியர், ‘ஸ்ரீ குமரகுருபரர்’
ஸ்ரீகாசிமடம், திருப்பனந்தாள். அ. கு. எ. 612 504
( தஞ்சை மாவட்டம் )

ஸ்ரீ காசிமடத்திற்காக வெளியிட்டவரும் ஆசிரியரும் ம. வே. பசுபதி,
திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் ஸ்ரீ குமரகுருபரர் அச்சகத்தில்
அச்சிட்டவர் முத்து. மெய்கண்டதேவன்
முகவரி :- ஸ்ரீ காசிமடம், திருப்பனந்தாள் – Pin 612 504